بسم الله الرحمن الرحيم

# இஸ்லாமின் பார்வையில் மத நல்லிணக்கம்

பலதரப்பட்ட மதங்களை உடைய சமுதாயங்கள் தங்களுக்குள் ஒற்றுமையாகவும் இணக்கமாகவும் வாழ்வதை பற்றியும், முஸ்லிம்கள் பிற சமுதாய மக்களுடன் புரிந்துணர்வோடு வாழ்வதை பற்றியும் சரியான ஆதாரங்களுடன் விவரிக்கிறது இந்நூல்!


ஆசிரியர்:

ஷைக் இம்தியாஸ் யூசுஃப் ஸலஃபி

மேலாய்வு:

உமர் ஷரீஃப் அப்துஸ் ஸலாம்



إن هدى الله هو الهدى
دار الهدى
DARUL HUDA

## About This Book


| | | |
|---|---|---|
| Name of the Book | : | **இஸ்லாமின் பார்வையில் மத நல்லிணக்கம்** |
| Name in English | : | Religious Harmony in Sight of Islam |
| Name in Arabic | : | الوئام الديني في نظر الإسلام |
| Author | : | Sheikh Imthiyas Yusuf Salafi (Srilanka) |
| Editor | : | **Mufti A. Omar Sheriff Qasimi** |
| **Proof Readers** | : | Abdul Qadir Rabbani, Imamudeen Hasani |
| Language | : | Tamil |
| Edition | : | 1st, Oct 2022 |
| Total Pages | : | 96 |
| Copies | : | 2000 |
| Book Code | : | DH-TML 2072 |
| Printed by | : | Patel Graphics, Chennai - 6. |

**HADIYAH: RS. 80/-**

Published by:

DARUL HUDA
QUALITY ISLAMIC BOOK PUBLISHERS
# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-1.
Phone :+91-44-25247866, | darulhuda.chennai@gmail.com
Mobile : +91-98401 74121 | www.darulhuda.net

# பொருளடக்கம்



----

# பதிப்புரை

எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே! இறையருளும் ஈடேற்றமும் அல்லாஹ்வுடைய தூதர் முஹம்மத் ﷺ அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார் இன்னும் தோழர்கள் மீதும் நிலவட்டும்.

ஷைக் இம்தியாஸ் அவர்கள் எழுதிய இந்த நூல் மிகவும் தனித்துவம் உடையதாகும்.

இந்த தலைப்பில், ஆதாரப்பூர்வமான கருத்துகளுடன் தொகுக்கப்பட்ட முதல் நூலாகவும் இது இருக்கலாம் என்று கருதுகிறோம்.

ஷைக் இம்தியாஸ் அவர்கள் குர்ஆன், ஸுன்னாவைப் பின்பற்றி அஹ்லுஸ் ஸுன்னாவுடைய சான்றோர் வழியில் மார்க்கப் பணிகள் செய்கிற அறிஞரும் அழைப்பாளரும் ஆவார்.

அல்லாஹ், இந்த நூலை அவர்களிடமிருந்து ஏற்று அவர்களின் மறுமையின் நற்பாக்கியத்திற்கு காரணமாக ஆக்கி அருள்வானாக! ஆமீன்.

பலதரப்பட்ட சமயங்களை பின்பற்றுகிற சமுதாயங்கள் தங்களுக்குள் எப்படி சமூக உறவுகளை அமைத்துக் கொள்ள வேண்டும், குறிப்பாக முஸ்லிம்கள் ஒரு நாட்டில் அதிக எண்ணிக்கையில் இருந்தாலும் அல்லது குறைவான எண்ணிக்கையில் இருந்தாலும் பிற சமய மக்களுடன் எத்தகைய ஆரோக்கியமான நட்புறவுகளை கடைப்பிடிக்க வேண்டும், தங்களது மார்க்கத்திலும் கொள்கையிலும் உறுதியாக இருப்பதுடன் பிற சமய மக்களுடன் எப்படிப்பட்ட சமூக பரஸ்பர நல்லுறவுகளை பின்பற்ற வேண்டும்

என்ற செய்திகளை மிகத் துல்லியமாக தகுந்த மார்க்க ஆதாரங்களோடு ஆசிரியர் இந்த நூலில் விளக்கி கூறி இருக்கிறார்கள். அல்ஹம்து லில்லாஹ்.

இந்த நூலை முஸ்லிம்கள் கண்டிப்பாக படிப்பதுடன் பிற சமய மக்களுக்கும் இந்த நூலை அதிகம் அன்பளிப்பு செய்து அவர்களையும் படிக்க தூண்ட வேண்டும்.

முஸ்லிம்கள் இதை படிப்பதால் நல்லிணக்கம் என்ற பெயரில் தவ்ஹீது உடைய கொள்கைக்கு முரணானதை செய்து வழிகெடுவதை விட்டும் அவர்கள் பாதுகாக்கப்படுவார்கள்.

முஸ்லிமல்லாதவர்கள் இந்த நூலைப் படிப்பதால் இஸ்லாமின் மீதும் முஸ்லிம்கள் மீதும் அவர்களுக்கு இருக்கிற தப்பான கருத்துக்கள் நீங்கி விடும். மேலும், இஸ்லாம் குறித்து தவறாக பிரச்சாரம் செய்யப்பட்ட பல பொய்களுக்கு அவர்கள் இந்த நூலில் பதில்களை காண்பார்கள். அது மட்டுமல்ல, இஸ்லாம் வகுத்துக்கொடுத்துள்ள இத்தகைய சமூக நட்புறவு முறைகள்தான் நீதமானது நேர்மையானது என்பதையும் சமூக ஒற்றுமைக்கும் பரஸ்பர அன்பிற்கும் மிக பொருத்தமானது என்பதையும் அவர்கள் மிகத் தெளிவாக அறிந்து கொள்வார்கள்.

இந்த நூல் அவர்களின் சந்தேகங்களை நீக்கக்கூடியதாக இருக்கும் என்பது மட்டுமல்லாமல் அவர்களுக்கு இஸ்லாமிய மார்க்கத்தின் மீதும் முஹம்மத் நபி ﷺ அவர்கள் மீதும் மிகுந்த பற்றை ஏற்படுத்தி அவர்கள் இஸ்லாமிய நேர்வழிக்குள் வர வாய்ப்பை ஏற்படுத்தும் என்று அகிலங்களின் இறைவன் அல்லாஹ்விடம் நாங்கள் நல்லாதரவு வைக்கிறோம். அல்லாஹ் இந்நூலை ஏற்று அருள் புரிவானாக! ஆமீன்.

தாருல் ஹுதாவின் பணிகளுக்கு உதவக்கூடிய சகோதரர்கள், சகோதரிகள் அனைவருக்கும் அல்லாஹ் சிறந்த நற்கூலியை

தருவானாக! அவர்களின் தங்குமிடத்தை சொர்க்கமாக ஆக்கிவைப்பானாக!

தாருல் ஹுதாவின் முந்திய, தற்போதைய பணியாளர்கள் எல்லோருக்கும் அல்லாஹ் கருணை புரிவானாக! அவர்களை மன்னிப்பானாக! அவர்களின் ஹலாலான தேவைகளை நிறைவேற்றித் தருவானாக! ஆமீன்.

இந்த நூல் குறித்து உங்கள் கருத்துகளையும் இதில் ஏதும் திருத்தம் இருப்பின் அதையும் எங்களுக்கு தெரியப்படுத்துங்கள்! அல்லாஹ் உங்களுக்கு நற்கூலி தருவானாக! ஆமீன்.

அல்லாஹ்வே எங்களிடமிருந்து ஏற்றுக்கொள்வாயாக! எங்களை மன்னித்து எங்கள் மீது இம்மையிலும் மறுமையிலும் கருணை புரிவாயாக! நீதான் நன்கறிந்தவன், நன்கு செவியுறுபவன். நீ மகா மன்னிப்பாளன், மகா கருணையாளன் ஆவாய்.

**குர்ஆன், ஸுன்னா பணியாளன்**

**உமர் ஷரீஃப், தாருல் ஹுதா**

# தாருல் ஹுதா
# அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்.

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாதுஹு

தாருல் ஹுதா அறிமுகத்தின் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் சமர்ப்பிக்கிறோம்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்: இறை நம்பிக்கையுடைய ஆண்களும், இறை நம்பிக்கையுடைய பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உறுதுணையாக இருக்கின்றனர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, (மார்க்க வரி) ஜகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகை யோருக்கு வெகு விரைவில் அல்லாஹ் அருள்புரிவான். (அல்குர்ஆன் 71 : 9)

மேலும், அல்லாஹு தஆலா கூறுகிறான்: (நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் மனிதர்களைச் சிறந்ததின் பக்கம் அழைத்து, நன்மையைச் செய்யும்படி ஏவி, பாவமான காரியங்களில் இருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றியாளர்கள். (அல்குர்ஆன் 3 : 104)

நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்: உங்களில் யாராவது ஒரு

தவறைக் கண்டால் அதை தனது கரத்தால் மாற்றட்டும். அது இயலாவிட்டால் தனது நாவால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹுல் புகாரீ)

மேலும் நபி ﷺ கூறுகிறார்கள்: இறைநம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசங்கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல! உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. (ஸஹீஹுல் புகாரீ)

இன்று நமது சமுதாயத்தில் சிறியோர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவையுள்ளவர்களாக இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட குர்ஆன் வசனங்கள் மற்றும் நபி மொழிகளுக்கிணங்க சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து, அல்குர்ஆன் மற்றும் நபி வழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறைப்பொருத்தத்தை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் **தாருல் ஹுதா**.

**பணிகளும் தொண்டுகளும்:**

**அழைத்தல்:**

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத் தூதர்கள் வாயிலாக நிலை நிறுத்தப்பட்டது. இறுதித் தூதர் முஹம்மது ﷺ அவர்களுக்குப் பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும், சிறப்புமிகு நபி மொழியும் இதன் அவசியத்தை நமக்கு வலியுறுத்துகின்றன. இதற்கிணங்க இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும், அதன்

உயர்வுகளை விளங்கச் செய்வதும் தாருல் ஹுதாவின் தலையாயப் பணியாகும்.

**கற்பித்தல்:**

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத் தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது முக்கிய பணியாகும்.

**நூல் வெளியிடுதல்:**

மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழி இவ்விரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களை தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூற்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது சிறப்புப் பணியாகும்.

**உதவுதல்:**

அல்லாஹு தஆலாவே அனைவரின் தேவைகள், துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப்பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை, எளியோர், நலிந்தோர் ஆகியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கெடுப்பது, பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவது முஸ்லிம்களுடைய அடிப்படைப் பண்புகளாகும். இவ்வுன்னதப் பணிக்காக **பைத்துல்மால்** (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்கச் சிந்தையும், மார்க்கப்பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான, உபரியான தர்மங்களைப் பெற்று தேவையுடையோருக்கு உதவுதல் தாருல் ஹுதாவின் நான்காவது பணியாகும்.

மேற்கூறிய பணிகளைத் தவிர, இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும், மனிதச் சமுதாயங்களுக்குள் நல்லுறவும், அன்பும், கருணையும், சமூக புரிந்துணர்வும் ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காக தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும் தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன் தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்கு பெறவும் அழைக்கிறோம்.

பேராற்றலுடைய அல்லாஹ்விடமே உதவி தேடுகிறோம்! அவனையே முன்னோக்கி நிற்கிறோம்!!

உங்களால் முடிந்த உதவிகளை அல்லாஹ்வின் பொருத்தம் நாடி தந்துதவுங்கள்.

நன்மையான காரியங்களில் எவற்றை நீங்கள் உங்களுக்காக (மரணம் வருவதற்கு) முன்னதாகவே செய்து கொள்கிறீர்களோ அவற்றை அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும், மகத்தான கூலியாகவும் பெற்றுக் கொள்வீர்கள். (அல்குர்ஆன் 73 : 20)

அல்லாஹ் தங்களுக்கு நற்கூலி வழங்குவானாக!

----

# அணிந்துரை

நிகரில்லா ஏக இறைவனாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். இறுதித்தூதர் நபி முஹம்மத் ﷺ அவர்கள் மீதும் அவர்களது வழிகாட்டல்களைப் பின்பற்றி வாழ்ந்த அன்னாரின் குடும்பத்தார் மற்றும் ஸஹாபாக்கள் மீதும் நல்லவர்கள் மீதும் அல்லாஹ்வின் சாந்தியும் சமாதானமும் என்றென்றும் உண்டாவதாக!

இன்று மக்கள், உண்மைக்காகவும் அன்புக்காகவும் ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள்; மனிதநேயத்தோடு பயணிக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நாம் வாழும் சூழலில் பல சமூக கலாச்சாரங்களையும் மதங்களையும் கொண்ட மக்கள் வாழ்கிறார்கள். அனைவரும் ஒற்றுமையாக வாழவேண்டும் நாட்டை முன்னேற்ற வேண்டும் என்று ஆவல் கொள்கிறார்கள். துரதிஷ்டவசமாக பல்வேறு குழுக்கள் மக்களை பிரித்தாளவும் அரசியல் லாபம் தேடவும் முனைவதால் குழப்பங்களும் முரண்பாடுகளும் வளர்ந்து வருகின்றன; நாடு பின்னோக்கி செல்கிறது.

பல மதத்தவர்கள், பல இனத்தவர்கள் கூடிவாழும் நாட்டில் அபிவிருத்தி காண்பது மிக இலகுவானது ஆகும். அனைத்து மக்களின் வளங்களையும் ஒத்துழைப்புகளையும் பெற்று நாட்டை கட்டியெழுப்புவது அவசியமானதாகும். மக்களை துண்டாட நினைத்தால், மத ரீதியாக பிரித்தாள நினைத்தால் நாடு எப்போதும் கொந்தளிப்பாக இருக்கும்; ஏழ்மையிலும் வறுமையிலும் தள்ளாடும் என்பதற்கு நடைமுறையில் நிறைய சான்றுகள் உள்ளன.

நபி முஹம்மத் ﷺ அவர்கள் இறைத்தூதராகவும் அரசியல் தலைவராகவும் வாழ்ந்தார்கள்; பல சமயத்தவர்களுடன்

நட்புறவை பேணி சமூக நல்லிணக்கத்தை கட்டி காத்தார்கள். அவர்கள் காட்டிய முன்னுதாரணங்கள் எக்காலத்திற்கும் எச்சமயத்தவருக்கும் பொருத்தமானவையாகும்.

இன்றைய கால கட்டத்தில் சமூக நல்லிணக்கம் பற்றி அதிகம் பேசுவதால் அதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படுவதனால் நபி ﷺ அவர்கள் காட்டிய சமூக நல்லிணக்கத்தை ஒவ்வொருவரும் கண்டிப்பாக படிக்க வேண்டும். அந்த தேவையை இந்த நூலில் ஆசிரியர் தொகுத்து காட்டியுள்ளார். இஸ்லாம் பற்றிய தவறான புரிதல்களுக்கும் விமர்சனங்களுக்கும் இந்த நூல் நல்லதொரு தெளிவை கொடுக்கும் என நம்புகிறேன். இன் ஷா அல்லாஹ்! ஒவ்வொருவரும் படிப்பதோடு மற்றவர்களுக்கும் அறிமுகப்படுத்த வேண்டிய, குறிப்பாக சிங்கள மொழியில் வரவேண்டிய நூலாகும். ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது. அல்லாஹ் அவருக்கு அருள் புரிவானாக!

*அஷ்ஷைய்க்* **N.P.M.** *அபூ பக்ர் சித்தீக் மதனீ*
அமீரு ஜமாஅத்தி அன்சாரிஸ் ஸுன்னத்தில் முஹம்மதிய்யஹ்,
பரகஹதெனிய, வேஉட குருனாகல, இலங்கை.

----

# முன்னுரை

அன்பாளனும் அருளாளனுமாகிய அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும். அவனது இறுதித்தூதர் முஹம்மத் ﷺ அவர்களுக்கும் அவர்களது குடும்பத்தவர்கள், தோழர்கள், மற்றும் நேர்வழியைப் பின்பற்றுகிற அனைத்து உள்ளங்களுக்கும் அல்லாஹ்வின் சாந்தி உண்டாவதாக!

இன்று எல்லா நாடுகளிலும் குறிப்பாக சிறுபான்மை மக்கள் வாழும் இலங்கை போன்ற நாடுகளில் சமூகங்களுக்கிடையில் சமூக உறவையும் நல்லிணக்கத்தையும் மேம்படுத்திட பல திட்டங்கள் முன்னெடுக்கப்படுகின்றன. பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

எல்லா இன மக்களும் சகோதரத்துவத்தையும் அமைதியையும் எதிர்பார்க்கின்றனர். மக்களை ஆளுகின்றவர்கள் அமைதியின்மையை எதிர்பார்க்கின்றனர்.

மதங்களையும் மக்களையும் கூறுபோட்டு அரசியல் செய்கிற கலாச்சாரம் தோன்றியப் பின்பே சமூக நல்லிணக்கம் பெரும் பாதிப்படைந்தது. தங்களது வாக்கு வங்கியை தக்க வைப்பதற்காகவும் அரசியல் பதவிகளில் நீடிக்க வேண்டும் என்பதற்காகவும் மதங்களுக்கிடையேயும் மக்களுக்கிடையேயும் மோதல்களை உருவாக்குகின்றனர்.

இந்த மோதல் நிலை அணைந்து விடாமல் இருக்க கலவரங்களையும் தோற்றுவிக்கின்றனர். ஒரு பிரச்சனை முடியும்போது இன்னொரு பிரச்சனையை மூட்டிவிடுகின்றனர். பல்லாயிரக் கணக்கான மனித உயிர்களை பலிகொடுத்து கோடிக்கணக்கான சொத்துக்களை தீக்கிரையாக்கி குளிர் காய்கின்றனர். இதன் காரணமாக நாடு பற்றி எரிகிறது.

தங்களது சுயநலத்திற்காக மக்களை கூறுபோடும் இந்த அரசியல்

மற்றும் மதவாத சிந்தனை நாட்டை அதளபாதாளத்திற்கு தள்ளிவிடுகிறது. இதன் காரணமாக சட்டம் ஒழுங்கு சீர்கெட்டுப்போகின்றன. நாட்டில் அபிவிருத்தி நின்றுப்போகிறது. மக்களின் வளங்கள் நாசமாகின்றன. சமூகங்களுக்கிடையே அமைதியின்மையும் அவநம்பிக்கையும் தோற்றம் பெறுகின்றன. தணலில் விழுந்த புழுக்கள் போல் எப்போதும் மக்கள் துன்பத்தில் வெந்துக் கொண்டிருக்கிறார்கள்.

நல்லிணக்கத்தைப் பாதுகாப்பதில் சமூகங்களுக்கு மட்டுமின்றி அரசுக்கும் பெரிய பங்கு உண்டு. பல இன, பல மொழி, பல கலாச்சாரங்களைக் கொண்ட ஒவ்வொருவரின் நம்பிக்கைகளைப் பாதுகாத்து, காயப்படுத்தாமல், காயப்படுத்த இடம் கொடுக்காமல், கண்ணியப்படுத்துவதும் எல்லா இன மக்களின் வளங்களை ஒன்று திரட்டுவதும் அவற்றை அபிவிருத்தி நோக்கி திருப்பி விடுவதும் அரசின் பொறுப்பாகும்.

சமூகங்களுக்கிடையிலான ஒற்றுமையும் பரஸ்பர ஒத்துழைப்பும் நிரந்தரமான அமைதிக்கும் உறுதியான அரசுக்கும் அவசியமாகும். இந்த ஆக்கப்பூர்வமான பணிகளை அரசாங்கம் முன்னெடுக்கும்போதே நாடு உண்மையான அபிவிருத்தியை காணும். பொருள் சார்ந்த, உலகாதாய சிந்தனைகளால் அபிவிருத்திக் காண்பதை விட மனித பண்பாடுகளால் காண்கிற அபிவிருத்தியே அர்த்தமுள்ளதாக இருக்கும்.

இதன் அடுத்த பொறுப்பு மீடியாவுக்கு உண்டு. மீடியா ஜனநாயகத்தின் மூன்றாவது தூண் என சொல்லப்படுகிறது. ஜனநாயகம், மக்களை வாழவைப்பதும் வாழ்வுக்கு உரமூட்டுவதுமாகும். இந்த நவீன உலகத்தில் மீடியாவை எவரும் புறம் தள்ளிவிட்டு வாழ முடியாது. மீடியா மக்களை புறம் தள்ளவும் முடியாது. மக்களால் மக்களுக்கு நன்மை செய்கிற பணியை உருவாக்கிட மீடியா வழிகாட்ட வேண்டும்.

உள்ளதை உள்ளபடி சொல்ல வேண்டும். தவறிழைத்தவனை

அல்லது குற்றவாளியை அவனது இனத்துடன், அவனது மதத்துடன் சம்பந்தப்படுத்தாமல் குற்றத்துடன் தொடர்புப்படுத்தி காண்பிக்க வேண்டும். எந்த மதமும் வன்முறையை போதிப்பதில்லை. மனிதன் செய்கிற குற்றங்களுக்கு மதம் காரணமில்லை. அனைவரும் நாட்டின் குடிமக்கள் என்கிறபோது அதில் இன ரீதியான, மத ரீதியான, சாதி ரீதியான அடையாளங்களை காட்ட வேண்டிய அவசியமில்லை. இதுதான் ஊடக தர்மமாகும். துரதிஷ்டவசமாக மீடியாவும் இனவாத, மதவாத சிந்தனைக்கு தீனி போடுவதன் மூலம் சமூக நல்லிணக்கம் பொசுங்கிப் போகிறது.

ஆக்கப்பூர்வமான, நடுநிலையான செய்திகள் மற்றும் எதிர்ப்புகளில்தான் நாட்டின் உயிர் மூச்சு தங்கியுள்ளது. பக்கச்சார்பற்ற மீடியாக்கள் மூலமே நல்லுறவை பலப்படுத்தவும் நாட்டின் மதிப்பை மேம்படுத்தவும் நிச்சயமாக முடியும். நாட்டின் வளர்ச்சி, குடிமக்களை பண்படுத்துவதில் தங்கியுள்ளது. ஒரு குடிமகனை பண்படுத்துவது என்பது நாட்டுக்கு நல்லதொரு குடிமகனை உருவாக்குவது என்று அர்த்தமாகும். குடிமக்கள் பண்படும்போது நாடு பக்குவப்படும். அது இல்லையேல் நாடு சீரழிந்து போகும்.

தனிமனித உரிமை என்ற பெயரில், அல்லது மதச்சார்பற்ற நாடு என்ற பெயரில் அடுத்த மதத்தினரின் உணர்வுகளை சீண்டிப் பார்ப்பதும் காயப்படுத்துவதும் பேராபத்தாகிவிடும். மதத்தை ஏற்றவரும் ஏற்காதவரும் அடுத்தவர் மீது எல்லை மீறாமல் இருக்கின்ற வரை தனிமனித உரிமையும் சகிப்புத்தன்மையும் போற்றப்படும்.

சிறுபான்மை முஸ்லிம் சமூகம் தமது மத கொள்கைகள், கலாச்சாரப் பண்புகள் பற்றியும் நல்லுறவுகள் பற்றியும் பெரும்பான்மை சமூகத்திற்கு புரிய வைப்பதற்காக மீடியாவின் மீது அக்கறை காட்ட வேண்டும். மீடியாவை விட்டு

தூரமாகின்ற எந்த சமூகமும் வெற்றிகாணாது. அந்தக் காலத்தில் இருந்த மீடியாக்களை பயன்படுத்தி இறைத்தூதர்கள் தங்களது கொள்கைகளை மக்களுக்கு தெளிவுபடுத்தினார்கள் என்ற பாடத்தை குர்ஆன் சொல்லித் தருகிறது.

இஸ்லாமிய மார்க்கம் இந்த நல்லுறவை மேம்படுத்த அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டுள்ளது. சிலைவணக்கம் புரிந்த மக்களிடையேயும் வேதம் கொடுக்கப்பட்ட யூத, கிறிஸ்தவ மக்களிடையேயும் நபி முஹம்மத் ﷺ அவர்கள் வாழ்ந்தார்கள். மதீனா எனும் இஸ்லாமிய நாட்டை உருவாக்கி அரசாண்டார்கள்.

அந்த அரசாங்கத்திற்குள் கொள்கை ரீதியாக மாறுபட்ட சமூகங்களுக்கிடையே நல்லுறவை கட்டி வளர்க்க அனைத்து வழிகளையும் உருவாக்கினார்கள். இந்த மக்களுடன் உண்மை, நேர்மை, நீதி நியாயத்துடன் வாழ்ந்தார்கள். அந்த மக்களுக்கு மதம், அரசியல், பொருளாதாரம் அனைத்திலும் சுதந்திரத்தை வழங்கினார்கள்.

**உண்மையான நல்லிணக்கம் என்பது ஒருவர் தனது மதக் கொள்கையை விட்டு கொடுக்காமலும், அடுத்தவர் மீது தனது மதத்தை திணிக்காமலும் மற்றவரின் மதக் கலாச்சாரத்தில் கரைந்துப் போகாமலும் தனித்துவமாக நிற்பதாகும் என்பதை இந்த உலகிற்கு முஹம்மத் ﷺ அவர்கள் எடுத்துக் காட்டினார்கள்.**

இன்றைய காலத்தில் முஸ்லிம்கள் கண்டிப்பாக முஹம்மத் நபி ﷺ அவர்கள் மேற்கொண்ட சமூக நல்லிணக்கத்தை அறிந்து, முறையாக பின்பற்றி நடக்க வேண்டும் என்ற ஆசையிலும் முஸ்லிமல்லாத நண்பர்கள் இஸ்லாம் கூறுகிற சமூக வாழ்வியலை தெரிந்து கொள்ள வேண்டும் என்ற பேராவலிலும் இந்நூலை தொகுத்துள்ளேன்.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய ஜம்இய்யது அன்ஸாரிஸ்

ஸுன்னத்தில் முஹம்மதிய்யஹ்வின் அமீரும் மரியாதைக்குரிய ஆசிரியருமாகிய அபூபக்ர் சித்தீக் மதனீ அவர்களுக்கு நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும், இந்நூலை மேலாய்வு செய்து வெளியிடுவதற்கு முன்வந்த தாருல் ஹுதா நிறுவனத்தின் தலைவரும் மரியாதைக்குரிய நண்பரான அஷ் ஷெய்க் முஃப்தி உமர் ஷரீஃப் காஸிமி அவர்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்.

எல்லாவற்றுக்கும் மேலாக என்னை படைத்துப் போஷிக்கின்ற அல்லாஹ்வுக்கு முதலில் நன்றியை தெரிவித்துக் கொள்வதுடன், என்னை வளர்த்து ஆளாக்கிய என் பெற்றோரின் மண்ணறையும் மறுமை வாழ்வும் சுபீட்சம் பெற்றிட அல்லாஹ்வை பிரார்த்திக்கிறேன். நிச்சயமாக அவனே செவிமடுப்பவனும் பதிலளிப்பவனும் ஆவான்.

**M.S.M.** *இம்தியாஸ் யூசுஃப்* **31.10.2020**

----

# நல்லிணக்கத்தின் முன்னோடி நபி முஹம்மத் ﷺ

மக்காவில் வாழ்ந்த மக்கள் ஓரிறைக் கொள்கையில் நெறி தவறி, ஒழுக்க ரீதியாக வீழ்ச்சிக் கண்ட சமூகமாக வாழ்ந்து வந்தார்கள். பலதெய்வ வழிபாடுகளை மார்க்கமாகக் கொண்டு வணக்கவழிபாடுகள் செய்து வந்தார்கள்.

மக்காவையும் அரேபிய தீபகற்பத்தையும் சுற்றி வாழ்ந்த மக்கள் மத்தியில் பல்வேறு மதங்களும் பல்வேறு கடவுள் கொள்கைகளும் சித்தாந்தங்களும் கலாச்சாரங்களும் காணப்பட்டன.

நபி ﷺ அவர்கள் இஸ்லாமிய மார்க்கத்தை போதிக்கவும் அதனடிப்படையில் முஸ்லிம் சமூகத்தை வழிநடத்தவும் ஈடுபாடு கொண்டார்கள். அதேவேளையில் கொள்கை, கலாச்சார ரீதியில் மாறுபட்ட யூத, கிறிஸ்தவ மற்றும் ஏனைய மக்கள் மத்தியில் சமூக நல்லிணக்கத்தை வளர்க்கவும் சமூக ஒற்றுமையை நிலை நிறுத்தவும் பாடுபட்டார்கள்.

நபி ﷺ அவர்கள் கொண்டு வந்த மார்க்கம் அனைத்து இன மக்களுக்கும் உரியதாகும். அதனை ஏற்பதும் மறுப்பதும் மக்களின் விருப்பமாகும். மக்கள் மன்றத்தில் எடுத்துக் கூறுவதும் விவரிப்பதும்தான் நபி ﷺ அவர்களின் பொறுப்பாக இருந்தது. மத சுதந்திரத்தை வழங்குவது நபி ﷺ அவர்களின் பிரச்சாரத்தின் அடிப்படையாக இருந்தது. அதனை பின்வருமாறு அல்லாஹ் தனது நபிக்கு உத்தரவிட்டான்.

நிச்சயமாக நாம் மக்களுக்காக உம்மீது இந்த வேதத்தை சத்தியத்துடன் இறக்கினோம். ஆக, யார் நேர்வழி செல்கிறாரோ அவர் தனது (ஆன்மாவின்) நன்மைக்காகத்தான் நேர்வழி செல்கிறார். யார் வழிகெடுகிறாரோ அவர் வழிகெடுவதெல்லாம் அதற்கு (-தனது ஆன்மாவிற்கு) பாதகமாகத்தான். (நபியே!)

நீர் அவர்கள் மீது கண்காணிப்பவராக (-அவர்களை நிர்ப்பந்திப்பவராக) இல்லை. (அல்குர்ஆன் 39 : 41)

ஆகவே, அறிவுரை கூறுவீராக! நீரெல்லாம் அறிவுரை கூறுபவர்தான். அவர்களை நிர்ப்பந்திப்பவராக (கட்டாயப்படுத்தக் கூடியவராக) நீர் இல்லை. (அல்குர்ஆன் 88 : 21, 22)

இன்னும், (நபியே!) உங்கள் இறைவனிடமிருந்து உண்மை(யான இந்த வேதம்) வந்துவிட்டது. விரும்பியவர்கள் (இதை) நம்பிக்கை கொள்ளலாம். விரும்பியவர்கள் (இதை) நிராகரித்து விடலாம். (அல்குர்ஆன் 18 : 29)

இஸ்லாமில் (இணைவதில்) அறவே நிர்ப்பந்தமில்லை. வழிகேட்டிலிருந்து (விலகி) நேர்வழி மிகத் தெளிவாகி விட்டது. ஆக, எவர் ஷைத்தானை நிராகரித்து, அல்லாஹ்வை நம்பிக்கை கொள்கிறாரோ அவர் மிக உறுதியான வளையத்தை பற்றிப்பிடித்துக் கொண்டார். அறவே, அ(ந்)த (வளையத்தி)ற்குத் துண்டிப்பு இல்லை. அல்லாஹ் நன்கு செவியுறுபவன், மிக அறிந்தவன் ஆவான். (அல்குர்ஆன் 2 : 256)

உங்கள் மார்க்கம் உங்களுக்கு. எனது மார்க்கம் எனக்கு. (அல்குர்ஆன் 109 : 6)

(நபியே!) அவர்கள் உம்மை பொய்ப்பித்தால், “என் செயல் எனக்கு; இன்னும், உங்கள் செயல் உங்களுக்கு; நான் செய்வதிலிருந்து நீங்கள் நீங்கியவர்கள்; இன்னும், நீங்கள் செய்வதிலிருந்து நான் நீங்கியவன்” என்று கூறுவீராக! (அல்குர்ஆன் 10 : 41)

இஸ்லாமை ஏற்கவோ, அல்லது, அதை நிராகரிக்கவோ மக்களுக்கு உரிமை உண்டு. எந்த மதத்தை தேர்வு செய்வது என்ற சுதந்திரம் அவர்களுக்கு உண்டு. அதில் இஸ்லாம் தலையிடாது.

யாரையும் பலவந்தப்படுத்தி மார்க்கத்தினுள் நுழைவிக்கவோ ஆசைவார்த்தைகள் கூறி ஏமாற்றிவிடவோ கூடாது. ஒருவர் இஸ்லாமை ஏற்றால் அவரது பெற்றோர் மற்றும் மனைவி மக்களும் இஸ்லாமிற்கு வரவேண்டும் என்று நிர்ப்பந்திக்கவும் முடியாது. ஒவ்வொருவருக்கும் தமது கொள்கையை முடிவு செய்யும் உரிமை உண்டு. அதில் எவரும் குறுக்கிட கூடாது என்றே குர்ஆன் விவரிக்கிறது.

இஸ்லாமை ஏற்றவர் மற்றவர்களின் மத கொள்கையையோ, வழிபாட்டு முறைகளையோ கொச்சைப்படுத்தவோ, தூற்றவோ கூடாது என்றும் அல்லாஹ் முஸ்லிம்களுக்கு உறுதியாக கட்டளையிடுகிறான்.

(நம்பிக்கையாளர்களே!) அல்லாஹ்வை அன்றி எவர்களை அவர்கள் வணங்குகிறார்களோ அவர்களைத் திட்டாதீர்கள். அதனால் அவர்கள் அறிவின்றி வரம்புமீறி அல்லாஹ்வைத் திட்டுவார்கள். (அல்குர்ஆன் 6 : 108)

எவர் எந்த கடவுளை வணங்கினாலும், அல்லது எந்த மத சித்தாந்தத்தை ஏற்றாலும் அக்கொள்கையுடையவரை திட்டக்கூடாது; நிந்திக்கக்கூடாது. ஒவ்வொருவருக்கும் தனது கடவுள் புனிதமாக இருக்கலாம். அவரை புண்படுத்தக்கூடாது என்ற கொள்கையை முஹம்மத் ﷺ அவர்கள் முன்வைத்தார்கள்.

இஸ்லாமின் தனித்துவத்தைப் பேணி, ஓரிறைக் கொள்கையின் அடிப்படையில் வாழ்ந்தபோது கடுமையான எதிர்ப்புகளை முஸ்லிம்கள் எதிர்கொண்டார்கள்.

முஸ்லிம்கள் மீது பகைமை கொண்டவர்கள் முஸ்லிம்களுக்கு எதிராக தாக்குதல்களையும் தொல்லைகளையும் கொடுத்தனர். அவர்கள் தந்த கொடுமைகளை கேட்கும்போது இரத்தம் உறைந்து விடும். அந்த கொடுமைகளை தாங்கிக் கொள்ள முடியாமல் நசுங்கிப் போன முஸ்லிம்கள் நபி ﷺ அவர்களிடம் வந்து பின்வருமாறு முறையிட்டார்கள்:

அல்லாஹ்வின் தூதரே! இணைவைப்பாளர்களுக்கு எதிராக பிரார்த்தனை செய்யுங்கள் என வேண்டியபோது நான் சபிப்பவனாக அனுப்பப்படவில்லை. மக்களுக்கு அருளுக்குரியவனாக அனுப்பப்பட்டுள்ளேன் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[1]

துஃபைல் என்ற நபித்தோழர் நபி ﷺ அவர்களிடம் வந்து அல்லாஹ்வின் தூதரே! தவ்ஸ் கிளையினர் மாறுசெய்து விட்டனர். அவர்களுக்கு எதிராக அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்யுங்கள் எனக் கூறினார். யா அல்லாஹ்! தவ்ஸ் கிளையினருக்கு நேர்வழி காட்டி அவர்களை முஸ்லிம்களாக எங்களிடம் கொண்டு வருவாயாக என நபி ﷺ அவர்கள் பிரார்த்தித்தார்கள்.[2]

மக்கள் அல்லாஹ்வையும் அல்லாஹ்வின் தூதரையும் நிராகரிக்கிறார்கள். முஸ்லிம்களை கொடுமைப்படுத்துகிறார்கள் என்பதற்காக அந்த மக்கள் அழிந்துபோக வேண்டும் என்று முஹம்மத் ﷺ அவர்கள் ஒருபோதும் விரும்பியதே இல்லை. மாறாக பொறுமையுடன், சகிப்புத்தன்மையுடன் நடந்துக் கொண்டார்கள். அவர்கள் மீது கருணைக் காட்டினார்கள்.

அல்லாஹ்வே! நான் மனிதன்தான். முஸ்லிம்களில் யாரையாவது ஒருவரை நான் ஏசி இருந்தாலோ, அல்லது சபித்திருந்தாலோ, அல்லது அவரை அடித்திருந்தாலோ அதை அவருக்கு (பாவத்தை) தூய்மைப்படுத்தக் கூடியதாகவும் (உன் புறத்திலிருந்து) கருணையாகவும் ஆக்குவாயாக![3]

மனிதன் என்ற அடிப்படையில் என்னால் நடைபெறும் தவறுகளால் மக்கள் சிரமத்திற்கு ஆளாகக் கூடாது என கவலை கொண்டார்கள்.

1. அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் எண்: 2599.
2. அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 4392.
3. அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் எண்: 2601.

தங்கள் வாழ்வில் சந்தித்த மிகப் பயங்கரமான சம்பவம் எது என ஆயிஷா ﵂ அவர்கள், நபி ﷺ அவர்களிடம் கேட்டபோது தாயிஃப் எனும் நகரத்தில் வாழ்ந்த மக்களிடம் இஸ்லாமை எடுத்துச் சொன்னபோது சந்தித்த துன்பங்களைப் போன்று யாரிடமும் நான் சந்தித்ததில்லை எனக் கூறி அது பற்றி விவரித்தார்கள்.

தாயிஃப் மக்களின் தலைவர்கள் இஸ்லாமை ஏற்க மறுத்து, சிறுவர்களிடம் கற்களை கொடுத்து என்னை அடித்துத் துரத்தினார்கள். மேனியில் இரத்தம் வடிந்தோடி கால் பாதங்களை நனைத்துக் கொண்டிருந்த நிலையில் இருக்கும்போது வானவர் ஜிப்ரீல் என்னிடம் வந்து இம்மக்களை இரு மலைகளையும் ஒன்று சேர்த்து நசுக்கி அழித்துவிடவா எனக் கேட்டார். இல்லை! அதை ஒருகாலும் நான் விரும்ப மாட்டேன். மாறாக, அல்லாஹ்வை மட்டும் வணங்கி அவனுக்கு இணைவைக்காதவர்களை அவர்களிலிருந்து அவன் உருவாக்குவான் என்று நான் ஆதரவு வைக்கிறேன் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[4]

தாயிஃப் மக்கள் ஒன்றுதிரட்டி தனக்கு எதிராக கொடுமைகள் புரிகிறார்கள் என்றால் உண்மையை புரியாமல், அறியாமையினால் செய்கிறார்கள்; இன்று இல்லாவிட்டாலும் நாளை அவர்கள் உண்மையை புரிந்து கொள்வார்கள்; இவர்கள் இல்லாவிட்டாலும் இவர்களது சந்ததிகள் உண்மையை ஏற்றுக் கொள்வார்கள் என முஹம்மத் ﷺ அவர்கள் நல்லெண்ணம் வைத்தார்கள்.

தாயிஃபிலிருந்து திரும்பி மக்காவுக்குள் நுழைவதாக இருந்தால் மக்காவிலுள்ள எவராவது பாதுகாப்பு வழங்கினால்தான் நுழைய முடியும் என்ற நிலையில் நபி ﷺ அவர்கள் இருந்தார்கள். இல்லையேல் மக்காவின் தலைவர்கள் தடுத்து விடுவார்கள். அந்நேரத்தில் முத்இம் இப்னு அதீ என்பவர் தனது ஆயுதங்களை ஏந்திக் கொண்டு ‘‘நான் முஹம்மதுக்கு அடைக்கலம்

4. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 3231.

கொடுக்கிறேன்” என்று முன்வந்தார். அவரும் அவரது ஆண் பிள்ளைகளும் ஆயுதம் தரித்தவர்களாக முஹம்மத் நபி ﷺ அவர்களுக்கு பாதுகாப்பாக நின்றார்கள். “குறைஷிகளே! நான் முஹம்மதுக்கு அடைக்கலம் கொடுத்துவிட்டேன். உங்களில் எவரும் முஹம்மதை பழிக்கக்கூடாது” என முத்இம் தனது ஒட்டகத்தின் மீது அமர்ந்துக் கொண்டு உரக்கச் சொன்னார். அப்போது மக்காவின் தலைவர்களில் ஒருவரான அபூ ஜஹ்ல் என்பவன் “நீ அடைக்கலம் மட்டும் அளித்தாயா அல்லது நீயும் முஸ்லிமாகி விட்டாயா” எனக் கேட்டான். இல்லை! நான் அடைக்கலம் கொடுத்துள்ளேன் என்றார் முத்இம். அப்படியாயின் நீ அடைக்கலம் கொடுத்தவருக்கு நாமும் அடைக்கலம் கொடுத்தோம் என்றான்.[5]

நபி ﷺ அவர்கள் பொது வாழ்விலும் தனிப்பட்ட வாழ்விலும் எவருக்கும் தீங்கு இழைத்ததில்லை. முஹம்மத் ﷺ அவர்களை இறைத்தூதராக அங்கீகரிக்காத மக்களில் நல்லுள்ளம் படைத்தவர்களும் நபியவர்கள் மீது அன்பு காட்டியவர்களும் இருந்தார்கள் என்பதற்கு ஓர் உதாரணமாக முத்இம் திகழ்கிறார். முத்இமும் அவர்களது பிள்ளைகளும் முஹம்மத் நபியை இறைத்தூதராக அங்கீகரிக்காவிட்டாலும் முஹம்மத் நபியின் மீதுள்ள பற்றின் காரணமாக பாதுகாக்க முன்வந்தார்கள்.

முஹம்மத் ﷺ அவர்கள் அந்த மக்களுடன் நடந்து கொண்ட நல்லிணக்கத்திற்கும் சிறந்த பண்பாடுகளுக்கும் மிகச் சிறப்பான பல எடுத்துக்காட்டுகள் உள்ளன.

ஒரு சமயம் மக்காவிற்கு வெளியிலிருந்து வந்த ஒரு மனிதனிடமிருந்து மக்காவின் தலைவர்களில் ஒருவரான அபூ ஜஹ்ல், ஒட்டகம் ஒன்றை வாங்கினார். அதற்கான பணத்தை கொடுக்காமல் இழுத்தடித்துக் கொண்டு அம்மனிதரை ஏமாற்றிக் கொண்டிருந்தார். அம்மனிதர் தனக்குரிய உரிமையைப் பெற்றுத்

5. நூல்: சீரா இப்னு ஹிஷாம்.

தருமாறு பலரிடம் கூறியும் எதுவும் நடக்கவில்லை. இறுதியில் அங்கிருந்தவர்கள் இதோ இந்த மனிதரிடம் (முஹம்மதிடம்) செல்! அவர் உனது உரிமையை பெற்றுத் தருவார் என பரிகாசம் செய்தனர். முஹம்மத் நபிக்கு எதிராக கடுமையான போக்கை அபூ ஜஹ்ல் கொண்டிருப்பதனால் முஹம்மத் ﷺ அவர்கள் அங்கு சென்றால் பகைமை பற்றிக் கொள்ளும் என்ற நினைப்பில்தான் அவர்கள் இப்படி சொன்னார்கள்.

அந்த மனிதர் முஹம்மத் நபி ﷺ அவர்களிடம் வந்தார். முஹம்மத் நபி இறைத்தூதர் என்று அம்மனிதருக்கு தெரியாது. தனக்கு நடந்த அநீதியை குறிப்பிட்டார். வாரும் என்னுடன்! எனக்கூறி, அபூ ஜஹ்லின் வீட்டை நோக்கி முஹம்மத் ﷺ அவர்கள் சென்றார்கள். அபூ ஜஹ்லின் கதவைத் தட்டி வெளியில் வரச்செய்து அந்த மனிதருக்குரிய உரிமையை முஹம்மத் ﷺ அவர்கள் பெற்றுக் கொடுத்தார்கள். நபி ﷺ அவர்களின் நேர்மைக்கு முன்னால் அபூ ஜஹ்ல் பேச முடியாத ஊமையானார்.[6]

பாதிக்கப்பட்டவர் அறிமுகமானவரா, அறிமுகமற்றவரா என்பதல்ல பிரச்சனை. கைவிடப்பட்டவருக்கு நீதி கிடைத்ததா, நேர்மை நிலை நாட்டப்பட்டதா என்பதே முஹம்மத் ﷺ அவர்களின் குறிக்கோளாக இருந்தது.

நிராகரிப்பாளர்களான அம்மக்கள் தங்களது செல்வங்களையும் மற்றும் விலைமதிக்கத்தக்க பொருள்களையும் பத்திரப்படுத்திவைக்க அவற்றை முஹம்மத் ﷺ அவர்களிடம் நம்பி ஒப்படைப்பார்கள். முஹம்மத் ﷺ அவர்கள் மீது அவ்வளவு நம்பிக்கை அவர்களுக்கு இருந்தது.

மக்காவிலிருந்து மதீனாவுக்கு முஹம்மத் ﷺ அவர்கள் புலம் பெயர்ந்து (ஹிஜ்ரத்) செல்லும் வேளையில் அந்த மக்கள்

6. நூல்: சீரா இப்னு ஹிஷாம்.

பத்திரப்படுத்தி வைப்பதற்கு தந்த பொருள்களை தனது பெரிய தந்தையின் மகன் அலீ ﵁ அவர்களிடம் கொடுத்து இவற்றை உரியவர்களிடம் ஒப்படைத்து விடு என்றார்கள்.[7]

கடும் பஞ்சம் மற்றும் வறட்சியின் காரணமாக மழையின்றி முழர் கூட்டத்தினர் பாதிப்புக்குள்ளாகி இருந்தனர். (அவர்கள் இஸ்லாமை ஏற்றிருக்கவில்லை) அப்போது ஒருவர் வந்து அல்லாஹ்வின் தூதரே! முழர் கூட்டத்தினர் அழிவுக்குள்ளாகி விட்டனர். எனவே, அவர்களுக்காக மழைவேண்டி பிரார்த்தியுங்கள் எனக் கூறினார். உடனே முஹம்மத் ﷺ அவர்கள் அல்லாஹ்விடம் மழை வேண்டி பிரார்த்தித்தார்கள்.[8]

மனிதம் வாழவேண்டும், மனிதநேயம் பேணப்படவேண்டும் என்ற நோக்கத்தில் நபி ﷺ அவர்கள் அம்மக்களுக்காக மழை வேண்டி பிரார்த்தித்தார்கள்.

பெற்றோர் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளவில்லை என்பதற்காக பெற்றெடுத்த தாய் தந்தையை புறக்கணிக்கக் கூடாது; அவர்களுக்குரிய நன்மைகளை தடுக்கக் கூடாது; அவர்களது மனம் நோகாத படி பணிவுடன் நடக்க வேண்டும்; இன்பம் துன்பம் இரண்டிலும் கலந்து கொள்ள வேண்டும் என நபி ﷺ அவர்கள் வழிகாட்டினார்கள்.

அல்லாஹ் கூறுகிறான்:

இன்னும், உனக்கு அறிவில்லாத ஒன்றை எனக்கு நீ இணையாக்குவதற்கு அவர்கள் உன்னை கட்டாயப்படுத்தினால் அவ்விருவருக்கும் நீ கீழ்ப்படியாதே! (ஆனால்) உலக (விஷய)த்தில் அவ்விருவருடன் நல்ல முறையில் பழகுவாயாக!

(அல்குர்ஆன் 31 : 15)

அஸ்மா ﵂ என்ற பெண்மணி முஹம்மத் ﷺ அவர்களிடம் வந்து என் தாய் (இஸ்லாமை ஏற்காது) இணைவைப்பாளராக

7. நூல்: சீரா இப்னு ஹிஷாம், ஸாதுல் மஆத்.

8. நூல்: இப்னு கஸீரின் அல்குர்ஆன் 44 : 10வது வசனத்தின் விளக்கம், அஹ்மத்.

இருக்கும் நிலையில் செல்வத்தை வேண்டி என்னிடம் வந்திருக்கிறாள். என் தாயாருக்கு ஏதாவது கொடுத்து அவருடன் இரத்த உறவை நான் பேணிக்கொள்ளலாமா எனக் கேட்டார் “ஆம், உன் தாயுடன் உறவை பேணிக்கொள்” என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[9]

தாய் தந்தையின் உறவு மிக மேலானது. இஸ்லாமை காண்பித்து அந்த உறவை முறிப்பதையோ, பிரிப்பதையோ, அல்லது புறக்கணிப்பதையோ முஹம்மத் ﷺ அவர்கள் அனுமதிக்கவில்லை.

ஒரு மனிதர் பட்டு அங்கியை விற்பனை செய்வதைக் கண்ட நபித்தோழர் உமர் ؓ அவர்கள், இந்த அங்கியை வாங்கிக் கொள்ளுங்கள். ஜுமுஆ நாளிலும் தூதுக் குழுக்கள் தங்களிடம் வரும்போதும் அணிந்துக் கொள்ளலாம் என்று முஹம்மத் நபி ﷺ அவர்களிடம் கூறினார்கள். அப்போது நபி ﷺ அவர்கள், எவருக்கு மறுமையில் எந்த நற்பேறும் இல்லையோ அவர்தான் இதை அணிவார் (முஸ்லிம்களில் ஆண்களுக்கு இது தடுக்கப்பட்டுள்ளது) என்று கூறினார்கள். பிறகு, ஒருமுறை நபி ﷺ அவர்களிடம் பட்டு அங்கிகள் கொண்டு வரப்பட்டன. அவற்றிலிருந்து ஓர் அங்கியை உமர் ؓ அவர்களுக்கு நபி ﷺ அவர்கள் அனுப்பி வைத்தார்கள். உமர் ؓ அவர்கள், இது குறித்துக் கடுமையான சொற்களைத் தாங்கள் கூறியிருக்க, நான் எப்படி இதை அணிவேன்? என்று கேட்டார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள், நான் இதை நீங்கள் அணிந்து கொள்வதற்காகத் தரவில்லை. இதை நீங்கள் விற்றுவிடுங்கள்; அல்லது, வேறு எவருக்காவது அவர் அணிய கொடுத்து விடுங்கள் என்று கூறினார்கள். உமர் ؓ அவர்கள், இஸ்லாமை ஏற்காமல் (மக்காவில் வசித்து வந்த) தம் சகோதரருக்கு அந்த அங்கியை அனுப்பி வைத்தார்கள்.[10]

---

9. அறிவிப்பாளர்: அஸ்மா ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 2620, 5678.
10. அறிவிப்பாளர்: இப்னு உமர் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 2619.

மாற்றுக் கொள்கையிலிருந்த சகோதரனும் மனிதன் என்ற அடிப்படையில் உறவுகளை மேம்படுத்தவும் நன்மைகளில் ஒன்றுசேரவும் முஹம்மத் ﷺ அவர்கள் வழிகாட்டினார்கள்.

அண்டை வீட்டார் அந்நியவராக இருந்தாலும் அவர்களுக்கு அறம் செய்தல் வேண்டும்; நல்ல விதமாக நடந்துக் கொள்ள வேண்டும் என்று பணித்தார்கள்.

அல்லாஹ் கூறுகிறான்:

இன்னும், அல்லாஹ்வை வணங்குங்கள்; இன்னும், அவனுக்கு எதையும் இணைவைத்து வணங்காதீர்கள்; இன்னும், தாய், தந்தைக்கும், உறவினருக்கும், அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும், உறவினரான அண்டை வீட்டாருக்கும், அந்நியரான அண்டை வீட்டாருக்கும், அருகில் இருக்கும் நண்பருக்கும், பயணிகளுக்கும், உங்கள் வலக்கரங்கள் சொந்தமாக்கியவர்களுக்கும் கருணையுடன் உதவி செய்யுங்கள். கர்வமுடையவனாக, பெருமையுடையவனாக இருப்பவனை நிச்சயமாக அல்லாஹ் நேசிக்கமாட்டான். (அல்குர்ஆன் 4 : 36)

அண்டை வீட்டார் எப்போதும் நமக்கு மிகவும் நெருக்கமானவர். அவர் முஸ்லிமாக இருந்தாலும் முஸ்லிமல்லாதவராக இருந்தாலும் சரியே! தன் அண்டை வீட்டார் அமைதியாக நிம்மதியாக பாதுகாப்பாக இருக்க விரும்புவது போலவே அடுத்த வீட்டாரும் இருக்க வேண்டும் என்று ஒரு முஸ்லிம் விரும்ப வேண்டும். எப்போதும் அண்டை வீட்டாரே நமக்கு அரண் போன்று இருப்பவர்கள். ஆகவே, எந்த வகையிலும் அவர்களுக்கு தொல்லைகள், தொந்தரவுகள் கொடுத்திடக் கூடாது.

ஒருமுறை அப்துல்லாஹ் இப்னு அம்ரு ؓ எனும் நபித்தோழரின் குடும்பத்தில் ஆடு ஒன்று அறுக்கப்பட்டது. அவர் வீட்டுக்கு வந்தவுடன் “நமது அண்டை வீட்டாரான யூதருக்கு (இதன்

இறைச்சியை) கொடுத்தனுப்பினீர்களா?" எனக் கேட்டார். பிறகு, அண்டை வீட்டாரை என் சொத்துக்கு வாரிசாக்கி விடுவாரோ என நான் எண்ணும் அளவுக்கு அண்டை வீட்டார் விஷயத்தில் (வானவர்) ஜிப்ரீல் ﵇ அவர்கள் எனக்கு அறிவுறுத்திக் கொண்டே இருந்தார் என நபி ﷺ அவர்கள் சொல்ல நான் கேட்டிருக்கிறேன் என்ற நபிமொழியை (குடும்பத்தாரிடம்) நினைவூட்டினார்கள்.[11]

நபி ﷺ அவர்களிடம் முஸ்லிமல்லாத மக்கள் உதவி கேட்டு வந்தபோது அந்த மக்களின் வாழ்வாதாரத்தை பூர்த்திசெய்கிற வகையில் தாராளமாக கொடுத்து உதவினார்கள். முஸ்லிம்களிடம் வரியாக வசூலிக்கப்படுகிற ஸகாத் மற்றும் ஸதகா எனும் நிதியிலிருந்தே அந்த மக்களுக்கு இந்த உதவியை வழங்கினார்கள்.

இஸ்லாமின் பெயரைச் சொல்லி எங்களுக்கு உதவுங்கள் என யார் வந்து கேட்டாலும் அவருக்கு நபி ﷺ அவர்கள் கொடுக்காமல் இருக்க மாட்டார்கள். (முஸ்லிமல்லாத) ஒரு மனிதர் நபி ﷺ அவர்களிடம் வந்து இஸ்லாமின் பெயரால் உதவி கேட்டார். இரு மலைகளுக்கிடையே அடங்கும் அளவுக்கு அவருக்கு ஆடுகளை நபி ﷺ அவர்கள் வழங்கினார்கள். அவர் தனது சமுதாயத்தினரிடம் சென்று, 'என் சமுதாயமே! நீங்கள் இஸ்லாமை ஏற்றுக் கொள்ளுங்கள். வறுமைக்கு அஞ்சாமல் முஹம்மத் அள்ளிக் கொடுக்கிறார்' எனக் கூறினார்.[12]

முஸ்லிமுக்கும் முஸ்லிமல்லாதவருக்கும் இடையில் உடன்படிக்கை அல்லது ஒப்பந்தம் நடந்து விட்டால் அந்த ஒப்பந்தத்தை நிலைநாட்ட இறுதிவரை நம்பகத்தன்மையுடனும் நாணயத்துடனும் நடந்து கொள்ள வேண்டும். அந்த

11. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ரு ﵄, நூல்: ஸுனனுத் திர்மிதி எண்: 1943.

12. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ﵁, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் எண்: 2312.

ஒப்பந்தம் முறையாக பேணி பாதுகாக்கப்படவும் வேண்டும். ஒப்பந்தம் முறிக்கப்பட்டாலே அன்றி ஒப்பந்தத்திற்கு துரோகம் இழைக்கக்கூடாது என்று நபி ﷺ அவர்கள் வழிகாட்டினார்கள்.

(எனினும்,) இணைவைப்பவர்களில் எவர்களிடம் நீங்கள் உடன்படிக்கை செய்து, பிறகு அவர்கள் (உடன்படிக்கையின் அம்சங்களில்) எதையும் உங்களுக்கு குறைக்காமலும், உங்களுக்கு எதிராக (எதிரிகளில்) ஒருவருக்கும் உதவாமலும் இருந்தார்களோ அவர்களைத் தவிர. ஆக, அவர்களுக்கு அவர்களின் உடன்படிக்கையை அவர்களுடைய (உடன்படிக்கையின்) தவணை (முடியும்) வரை முழுமைப்படுத்துங்கள். நிச்சயமாக அல்லாஹ், தன்னை அஞ்சுபவர்கள் மீது அன்பு வைக்கிறான். (அல்குர்ஆன் 9 : 4)

சாமானிய மக்களுடன் நடந்து கொள்கிற உறவை போலவே பிரமுகர்கள், முக்கியஸ்தர்கள் என அறியப்படுகிற மக்களுடனும் முஹம்மத் ﷺ அவர்கள் ஒரே மாதிரியாக நடந்து கொண்டார்கள். இஸ்லாமை ஏற்காத மன்னர்களுடனும் தூதர்களுடனும் நல்லுறவை பேணினார்கள்.

தவ்மத்துல் ஜந்தல் எனும் நாட்டின் அரசர் உகைதிர் என்பவர், நபி ﷺ அவர்களுக்கு அன்பளிப்புகளை அனுப்பியபோது அவற்றை நபி ﷺ அவர்கள் பெற்றுக் கொண்டார்கள்.[13]

அய்லா என்ற ஊரின் மன்னன் (தன் தூதர் மூலமாக) நபி ﷺ அவர்களுக்கு ஒரு வெள்ளை நிறக் கோவேறுகழுதையை அன்பளிப்புச் செய்து ஒரு சால்வையும் போர்த்தினார். இன்னும், ரசூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் சமாதான ஒப்பந்தம் செய்து வரியையும் ஒப்படைத்தார். நபியவர்கள் அதை ஏற்றுக்கொண்டு அந்த மன்னரே அந்த மக்கள் மீது தொடர்ந்து ஆட்சி செய்வதற்கு ஆமோதித்தார்கள்.[14]

13. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 2616.
14. அறிவிப்பாளர்: அபூ ஹுமைத் அஸ்ஸாயிதீ ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 1481, மகாஸீ இப்னு இஸ்ஹாக்.

அன்பளிப்புகளை பெறுவதும் அதற்கு பதில் அன்பளிப்பு செய்வதும் முஹம்மத் ﷺ அவர்களின் பண்பாக இருந்தது.[15]

தனது மரணத்திற்கு மூன்று நாட்களுக்கு முன் மக்களுக்கு கூறிய அறிவுரையில், தூதுக் குழுவினருக்கு நான் பரிசுப் பொருட்களை கொடுத்து (கண்ணியப்படுத்தி) வந்தது போன்று நீங்களும் பரிசுகள் கொடுத்து வாருங்கள் எனக் கூறினார்கள்.[16]

அன்றைய காலத்தில் கைதிகள் மற்றும் அடிமைகளை வீட்டுவேலைகளுக்கும் தங்கள் சுய தேவைகளுக்கும் பயன்படுத்தும் முறை இருந்தது. அடிமைகள், முஸ்லிமல்லாதவர்களாகத்தான் இருந்தார்கள். அவர்கள் முஸ்லிம்களின் கீழ் பணி புரிந்தாலும், இஸ்லாமை ஏற்காதவர்களாக இருந்தாலும் அவர்களுக்குரிய உணவு, உடைகள் உட்பட அனைத்து உரிமைகளையும் நபி ﷺ அவர்கள் உத்தரவாதப் படுத்தினார்கள். அவர்களாக விரும்பி இஸ்லாமை ஏற்றால் அவர்களை விடுதலை செய்திடுமாறு கூறினார்கள். “உங்கள் அடிமைகளை அடித்து விடாதீர்கள். அப்படி அடித்தால் அதற்கான பரிகாரம் அவர்களை விடுதலை செய்வதாகும்” என முஹம்மத் ﷺ அவர்கள் கூறினார்கள்.[17]

முஸ்லிமல்லாதவர்கள் எல்லோரும் முஸ்லிம்களின் எதிரிகள் அல்லர். முஸ்லிம்களை அவர்களின் இல்லங்களிலிருந்து வெளியேற்றுபவர்களும், யுத்த களத்தில் முஸ்லிம்களுக்கு எதிராக நிற்பவர்களும்தான் முஸ்லிம்களின் எதிரிகள் ஆவர். முஸ்லிம்களை எதிர்த்து போர் புரியாத மாற்றுமத மக்களுடன் நட்புறவு பாராட்டுவது, நற்காரியங்களை மேற்கொள்வது, நன்மைகள் செய்வது ஆகிய செயல்களை நபி ﷺ அவர்கள் தடுக்கவில்லை.

15. அறிவிப்பாளர்: ஆயிஷா (ரலி), நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 2585.
16. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் (ரலி), நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 3053.
17. அறிவிப்பாளர்: இப்னு உமர் (ரலி), நூல்: ஸஹீஹ் முஸ்லிம் எண்: 1657.

எவர்கள் உங்களுடன் மார்க்கத்தில் போர் செய்யவில்லையோ, இன்னும், உங்கள் இல்லங்களில் இருந்து உங்களை வெளியேற்றவில்லையோ அவர்களை விட்டும் (அதாவது,) அவர்களுக்கு நல்லது செய்வதை விட்டும், அவர்களுடன் நீங்கள் நீதமாக நடப்பதை விட்டும் அல்லாஹ் உங்களை தடுக்க மாட்டான். நிச்சயமாக அல்லாஹ் நீதவான்கள் மீது அன்பு வைக்கிறான். (அல்குர்ஆன் 60 : 8)

இஸ்லாமையும் முஸ்லிம்களையும் எதிர்த்துப் போர்புரிபவர்கள் யார், பகைமை பாராட்டும் மக்கள் யார், பகைமை பாராட்டாத மக்கள் யார் என்பதை பிரித்தறிய வேண்டும். ஓர் இனத்திலுள்ள சிலர் பகைமை பாராட்டுகிறார்கள் என்பதற்காக ஒட்டுமொத்த இனத்தவர்களையும் விரோதிகளாக பார்க்கக் கூடாது. அவர்களுக்குரிய நன்மைகளை செய்வதை தடுத்துக் கொள்ளவும் கூடாது. அவர்களுக்கு மனிதநேயத்தை காண்பிக்க வேண்டும் என்று அல்லாஹ் கட்டளையிட்டான்.

எதிரிகளுடன் போர் புரியும்போது அவர்களில் கொல்லப்பட்டவர்களின் உடல்களை சிதைக்காதீர்கள். சிறுவர்கள், இன்னும் பெண்களை கொல்லாதீர்கள். மதகுருமார்களை கொல்லாதீர்கள். வழிபாட்டுத்தலங்களை அழிக்காதீர்கள். மடங்களில் தங்கியிருப்பவர்களை கொல்லாதீர்கள் என்றும் நபி ﷺ அவர்கள் வழிகாட்டினார்கள்.[18]

முஹம்மத் நபி ﷺ அவர்களுக்குப் பின் ஆட்சியாளராக பதவி வகித்த அபூ பக்ர் ؓ தனது படைத்தளபதிக்கு இவ்வாறே உத்தரவிட்டார்கள்.[19]

முஸ்லிம்களின் பள்ளிவாசல் மட்டுமின்றி ஏனைய மதத்தினரின் வழிபாட்டுத்தலங்களும் பாதுகாக்க வேண்டும், அவற்றை அழிக்கவோ சேதப்படுத்தவோ கூடாது என குர்ஆன் கூறுகிறது.

18. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ؓ, இப்னு உமர் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 3015, ஸஹீஹ் முஸ்லிம் எண்: 1731, ஸுனன் அபூ தாவூது எண்: 2614, முஸ்னது அஹ்மது எண்: 2728.

19. இது பற்றிய மேலதிக விவரத்தை ''போர் முனையில் முஹம்மத் நபி'' எனும் நமது நூலில் பார்க்கலாம்.

அவர்கள் தங்கள் இல்லங்களிலிருந்து எவ்வித நியாய(மான காரண)மின்றி வெளியேற்றப்பட்டார்கள், எங்கள் இறைவன் அல்லாஹ் என்று அவர்கள் கூறியதற்காகவே தவிர (வேறு எதற்காகவும் அவர்கள் வெளியேற்றப்படவில்லை). மக்களை - அவர்களில் சிலரை சிலரைக் கொண்டு அல்லாஹ் பாதுகாப்பது இல்லை என்றால் துறவிகளின் தங்குமிடங்களும் கிறித்தவ ஆலயங்களும் யூத ஆலயங்களும் அதிகமாக அல்லாஹ்வின் பெயர் நினைவு கூரப்படும் மஸ்ஜிதுகளும் உடைக்கப்பட்டிருக்கும். இன்னும், நிச்சயமாக எவர் அவனுக்கு (அல்லாஹ்விற்கு) உதவுவாரோ அவருக்கு அல்லாஹ் உதவுவான். நிச்சயமாக அல்லாஹ் வலிமை உள்ளவன், மிகைத்தவன் ஆவான். (அல்குர்ஆன் 22 : 40)

வழிபாட்டுத்தலங்களை அழிப்பதையும், மனித உயிர்களுக்கும் உணர்வுகளுக்கும் எதிராக செயல்படுவதையும் இவ்வசனம் கண்டிக்கிறது.

மாற்று மதத்தை சேர்ந்த ஒருவர் நியாயமான காரணங்களை முன்னிட்டு பாதுகாப்புத் தேடி வந்தால் அவருக்கு கண்டிப்பாக முஸ்லிம்கள் பாதுகாப்புக் கொடுக்க வேண்டும். அந்த பாதுகாப்பு அவரது உயிருக்கும் உடமைகளுக்கும் உத்தரவாதமாக இருக்க வேண்டும். அதேவேளை அவரது மத கொள்கையை மாசுபடுத்துவதாக இருக்கக்கூடாது. இச்சந்தர்ப்பத்தில் அவர் இஸ்லாமை அறிந்துக் கொள்ளும் பொருட்டு இஸ்லாம் பற்றியும் முஸ்லிம்கள் பற்றியும் அவருக்கு தெளிவுப்படுத்த வேண்டும். இப்படி செய்வது, தப்பான சிந்தனைகள் களையப்பட்டு நல்லெண்ணங்கள் உருவாக காரணமாக அமையும். அவரது அச்ச சூழல் மறைந்தால், அவரை பாதுகாப்பாக அவரது இடத்தில் கொண்டுபோய் சேர்ப்பது அவசியமாகும்.

அல்லாஹ் கூறுகிறான்:

இன்னும், (நபியே!) அந்த இணைவைப்பவர்களில் ஒருவர் உம்மிடம் பாதுகாப்புத் தேடினால், அல்லாஹ்வின் பேச்சை அவர் செவியுறும் வரை அவருக்கு பாதுகாப்பு அளிப்பீராக!

பிறகு அவரை அவருடைய பாதுகாப்பான இடத்திற்குச் சேர்த்து விடுவீராக! அதற்குக் காரணம், நிச்சயமாக அவர்கள் அறியாத மக்கள் ஆவார்கள். (அல்குர்ஆன் 9 : 6)

இஸ்லாமிய அரசின் பாதுகாப்பின் கீழ் முஸ்லிமல்லாதவர் பாதுகாப்பு கேட்கிறபோது அவருக்கு அடைக்கலம் கொடுப்பது அரசுக்குரிய பொறுப்பாகும் என்பதை முஹம்மத் ﷺ அவர்கள் தெளிவாக கூறினார்கள்.

அரசின் பாதுகாப்பை பெற்று உடன்படிக்கை செய்து வாழ்கிற முஸ்லிமல்லாத ஒருவரை ஒரு முஸ்லிம் கொலை செய்தால் அவர் சொர்க்கத்தின் வாடையைக் கூட நுகர முடியாது. அதன் வாடையையோ நாற்பது ஆண்டுகள் தொலைவிலிருந்துப் பெற்றுக்கொள்ளப்படும் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[20]

இஸ்லாமை ஏற்றதாக வெளிப்படையாகக் காட்டிக் கொண்டு, உள்ளத்தில் இறை நிராகரிப்பை வைத்துக் கொண்டு நயவஞ்சகத்தனமாக நடந்துக் கொண்ட பிரமுகர்களில் ஒருவர் அப்துல்லாஹ் இப்னு உபை என்பவர் ஆவார். இவர், இஸ்லாமின் எதிரிகளுடன் கூட்டுச்சேர்ந்து இஸ்லாமையும் முஸ்லிம்களையும் அழித்தொழிப்பதற்கு முழு அளவிலான முயற்சிகளை மேற்கொண்டார். இவர் முஸ்லிம்களின் துரோகி என்பது வெளிப்படையாக தெரிந்த விஷயமாக இருந்தது.

இவர் மரணித்தபோது அவரது உடல் மீது போர்த்துவதற்கு தங்களது மேலங்கியை தரவேண்டும் என்று அவரது மகன் முஹம்மத் ﷺ அவர்களிடம் கேட்டபோது நபியவர்கள் தமது மேலங்கியை கொடுத்தார்கள். அவரது உடலை குழியில் வைத்து இறுதிக் கடமைகளையும் முஹம்மத் ﷺ அவர்கள் முன்னின்று நடத்தினார்கள்.[21]

20. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர் ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 3166.

21. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 1269.

மதங்களுக்கு அப்பாற்பட்ட மனிதநேயத்தை நபி ﷺ அவர்கள் உலக மக்களுக்கு முன்வைத்தார்கள். மதத்தின் பெயரால் அத்துமீறல்கள் கட்டவிழ்த்து விடப்படுவதை ஒருபோதும் ஆதரிக்கவில்லை. மனிதனை வாழவைக்க தேவையான அனைத்து நல்ல விஷயங்களையும் முதலில் கவனிக்க வேண்டும் என்ற பார்வையை முன்வைத்தார்கள்.

ஒரு மனிதனை வாழவைப்பது ஒட்டுமொத்த மக்களையும் வாழவைப்பது போன்றதாகும். ஒரு மனிதனை கொலை செய்வது ஒட்டுமொத்த மக்களையும் கொலை செய்வது போன்றதாகும் என்று போதித்தார்கள்.

எவன் ஓர் ஆன்மாவை கொலை செய்கிறானோ அவன் மனிதர்கள் அனைவரையும் கொலை செய்தவன் போலாவான். எவன் ஓர் ஆன்மாவை வாழவைக்கிறானோ அவன் மனிதர்கள் அனைவரையும் வாழவைத்தவன் போலாவான். (அல்குர்ஆன் 5 : 32)

ஒரு மனிதனை வாழவைக்க அவன் என்ன ஜாதி, என்ன இனம், என்ன மதம், எந்த நாடு, இன்னும் என்ன மொழி பேசுபவன் என்று பார்க்காது, அவனுக்கு என்ன நற்பணிகளை செய்து உயிர் வாழவைக்க முடியுமோ அத்தனை பணிகளையும் விரைவாக முஸ்லிம்கள் செய்ய வேண்டும்.

சமூக பணிக்காக, சீர்திருத்த விவகாரங்களுக்காக எல்லா இன மக்களுடன் இணைந்து நன்மையான பணிகளில் ஈடுபடுவதை நபி ﷺ அவர்கள் ஊக்குவித்தார்கள்.

புனிதமான மஸ்ஜிதைவிட்டு அவர்கள் உங்களைத் தடுத்த காரணத்தால் (அந்த) சமுதாயத்தின் மீது உங்களுக்கு ஏற்பட்ட வெறுப்பு நீங்கள் (அவர்கள் மீது) எல்லை மீறி நடக்க உங்களைத் தூண்ட வேண்டாம். இன்னும், நன்மைக்கும் இறையச்சத்திற்கும் ஒருவருக்கொருவர் உதவுங்கள். இன்னும், பாவத்திற்கும் அநியாயத்திற்கும் ஒருவருக்கொருவர் உதவாதீர்கள். (அல்குர்ஆன் 5 : 2)

முஸ்லிம்களின் புனிதஸ்தலமான மக்காவிலுள்ள கஅபாவுக்கு முஸ்லிம்களை செல்லவிடாமல் முஸ்லிமல்லாதவர்கள் தடுத்தார்கள். அவர்கள் நம்மைத் தடுக்கிறார்கள் என்பதற்காக அவர்கள் மீதுள்ள கோபம் மற்றும் வெறுப்பின் காரணமாக அங்குள்ளவர்கள் மீது எல்லை மீறக்கூடாது, அவர்களுக்கு நன்மைகள் செய்வதை தடுத்துக் கொள்ளவும் கூடாது என அல்லாஹ் கட்டளை இடுகிறான்.

எதிரியாக இருந்தாலும், பகைவனாக இருந்தாலும், அந்நியராக இருந்தாலும் நன்மையான பணிகளை செய்து கொடுத்திட முஸ்லிம்கள் முன்வரவேண்டும். அந்த பணிக்காக மாற்றுமத மக்களுக்கு உதவிப்புரிய வேண்டும். ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பு வழங்குவதன் மூலமே மனிதர்கள் எல்லோரும் அமைதியாக, நிம்மதியாக வாழமுடியும்.

அதேவேளை பாவமான, தீமையான காரியத்தை எவருக்கும் செய்திடக்கூடாது. அதற்கான எந்த ஒத்துழைப்பையும் வழங்கிட கூடாது. பாவத்திற்கு துணை போவதன் மூலம் பூமியில் குழப்பங்கள் உருவாகி விடுகின்றன.

நன்மை செய்வதிலும் இறைவனை அஞ்சி நடப்பதிலும் ஒருவருக்கொருவர் உதவியாக இருந்து கொள்ளுங்கள். மேலும், பாவம் செய்வதிலும் வரம்பு மீறுவதிலும் ஒருவருக்கொருவர் உதவியாக இருக்காதீர்கள். (அல்குர்ஆன் 5 : 2)

என அல்லாஹ் உபதேசிக்கிறான்.

நீதி, நியாயம், தர்மம் அனைவருக்கும் உரியன. அதில் மதமோ, இனமோ, நாடோ குறுக்கிடக் கூடாது. பகைமைக் காரணமாக நீதிவழங்க மறுக்கக்கூடாது. தன்னை சார்ந்தவனுக்கு ஒரு நீதியும் தன்னை சாராதவனுக்கு ஒரு நீதியும் வழங்கக் கூடாது. நீதிக்கு முன் அனைவரும் சமம். தான் சொல்கிற உண்மை, தான் வழங்குகிற நீதி தனக்கோ, தனது குடும்பத்திற்கோ, தனது இனத்திற்கோ பாதகமாக இருந்தாலும் நீதியின் பக்கமே

முஸ்லிம்கள் நிற்க வேண்டும். பாதிக்கப்பட்டவனுக்கு நீதியை பெற்றுக் கொடுக்க வேண்டும். அதுவே அல்லாஹ்வுக்கு உவப்பானது என்று அல்குர்ஆன் வழிகாட்டுகிறது. அதைத்தான் முஹம்மத் ﷺ அவர்கள் பின்பற்றி நடந்தார்கள்.

நம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்காக பொறுப்புகளை மிகச் சரியாக நிறைவேற்றக் கூடியவர்களாக (நீதம், நேர்மையில் மிக உறுதியானவர்களாக), நீதிக்கு சாதகமாக சாட்சி கூறுபவர்களாக இருங்கள். ஒரு சமுதாயத்தின் (மீதுள்ள) துவேஷம் நீங்கள் நீதமாக நடக்காதிருக்க உங்களைத் தூண்ட வேண்டாம். நீதம் செலுத்துங்கள். அதுதான் இறையச்சத்திற்கு மிக நெருக்கமானதாகும். இன்னும், அல்லாஹ்வை அஞ்சுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை ஆழ்ந்தறிந்தவன் ஆவான். (அல்குர்ஆன் 5 : 8)

மக்கா நகரத்தில் “ஹில்ஃஃபுல் ஃஃபுழூல்” எனும் பெயரில் மனித உரிமையை காக்கிற அமைப்பு ஒன்று இருந்தது. இந்த அமைப்பு, “ஹர்புல் ஃஃபிஜார்” எனும் போர் நிகழ்ந்து நான்கு மாதங்களுக்கு பின்னர் உருவாக்கப்பட்டது. இப்போரில் மக்கள் பெரும் சேதங்களை சந்தித்திருந்தார்கள்.

ஒரு சமயம் ஏமன் நாட்டைச் சார்ந்த வியாபாரி ஒருவர் மக்காவிற்கு வந்து தனது சரக்குகளை விற்பனை செய்து கொண்டிருந்தார். அவரிடம் ஆஸ் இப்னு வாயில் எனும் ஒரு பிரமுகர் சரக்குகளை வாங்கிவிட்டு அதற்குரிய தொகையை கொடுக்காமல் இருந்தார். பாதிக்கப்பட்ட வியாபாரி தனக்கு நீதி கேட்டு மக்காவில் குரல் கொடுத்தார்.

இச்சந்தர்ப்பத்தில்தான் அநியாயத்திற்கு உள்ளானவர்களுக்காக நீதிபெற்றுக் கொடுப்பதற்கும் யுத்தங்களை தவிர்த்து, சமாதானத்தை உருவாக்குவதற்கும் அப்துல்லாஹ் இப்னு ஜுத்ஆன் அத்தைமி என்பவரின் வீட்டில் இந்த அமைப்பு நிறுவப்பட்டது. இந்த அமைப்பில் பிரதானமாக ஆறு கோத்திரங்கள் உறுப்பினர்களாக இருந்தனர்.[22]

22. நூல்: சீரா இப்னு ஹிஷாம்.

முஹம்மத் ﷺ அவர்கள் இறைத்தூதராக வருவதற்கு முன் அவர்களது இளமைக்காலத்தில் இந்த அமைப்புடன் தொடர்பு வைத்திருந்தார்கள். இறைத்தூதராக வந்த பின்பும் இந்த அமைப்புடன் தொடர்புகளை தொடர்ந்து பேண விரும்பினார்கள்.

ஹில்ஃபுல் ஃபுழூலில் பணியாற்ற எனக்கு அழைப்புக் கொடுத்தால் அந்த அழைப்புக்கு பதில் கொடுப்பேன் என நபி ﷺ அவர்கள் அறிவித்தார்கள்.[23]

சமூக பணிகளிலும், நல்லறங்களிலும் முஸ்லிமல்லாத சமூக செயல்பாட்டாளர்களுடன் முஸ்லிம்கள் ஈடுபடுவதற்கு இஸ்லாம் எப்போதும் தடையாக இருக்காது. மாறாக, சமூக நலனில் அக்கறை கொண்டு செயல்பட வேண்டும் என்ற ஆர்வத்தை நபி ﷺ அவர்கள் உருவாக்கினார்கள். முஸ்லிம்கள் வாழ்கிற நாட்டில் இத்தகைய அமைப்பை உருவாக்குவது; அல்லது, அத்தகைய அமைப்பை உருவாக்கி நடத்துகிற மக்களோடு இணைந்து பணியாற்றுவது அத்தியாவசியமாகும் எனும் பாடத்தையும் கற்றுத் தந்தார்கள்.

முற்காலத்தில் அரபு குலங்களுக்கிடையே நட்புறவு ஒப்பந்தம் செய்துக் கொள்கிற வழக்கம் இருந்தது. ஒப்பந்தம் செய்து கொண்ட இரு குழுக்களில் ஒன்று மற்ற குழுவினருக்கு எல்லா வகையிலும் ஒத்துழைப்பு வழங்குவர். சொத்தில் ஆறில் ஒரு பங்கையும் கொடுத்து விடுவர். நியாயமற்ற கோரிக்கையாக இருந்தாலும் அதனையும் பேணிக்கொள்வர்.

இஸ்லாம் வந்த பின் இந்த ஒப்பந்தத்தில் உள்ள நல்ல விஷயங்களை (பரஸ்பர ஒத்துழைப்புகளை) பேணுமாறும், நியாயமற்ற கோரிக்கைகளையும் சொத்தில் பங்கு கொடுப்பதையும் தவிர்க்குமாறும் நபி ﷺ அவர்கள் வழிகாட்டினார்கள். வாரிசு

23. அறிவிப்பாளர்: தல்ஹா இப்னு அப்தில்லாஹ் இப்னி அவ்ஃப் ؓ, நூல்: அஸ்ஸுனனுல் குப்ரா லில் பைஹகி எண்: 13080.

சொத்தை தமது பிள்ளைகளுக்கும் குடும்ப உறவுகளுக்கும் இடையில் பங்கிடும் முறையை நபி ﷺ அவர்கள் தெளிவுப்படுத்தினார்கள்.

(இஸ்லாம் வருவதற்கு முன்னிருந்த) அறியாமைக்காலத்தில் நடைபெற்ற ஒப்பந்த நட்புறவுகள் இஸ்லாமிற்குப் பிறகு இன்னும் பலத்தை அதிகரிக்கவே செய்யும் (காலாவதியாகி விடாது) என முஹம்மத் ﷺ அவர்கள் கூறினார்கள்.[24]

இஸ்லாமிற்கு வந்ததன் பின் யூதர்களுடன் இருக்கும் நட்புறவை கைவிட வேண்டுமா? என மதீனாவாசிகள் கேட்டபோது, வேண்டாம்! அதைப் பேணிக் கொள்ளுங்கள் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். நன்மையான எந்தக் காரியத்திற்கும் இஸ்லாம் தடையாக இருக்காது என்பதை இதன் மூலம் முஹம்மத் ﷺ அவர்கள் எடுத்துக் காட்டினார்கள்.

இஸ்லாமிய பிரச்சாரத்தின் ஆரம்ப காலங்களில் கடும் விரோதத்தையும் குரோதத்தையும் காட்டிய மக்கா நகரம்,[25] இருபத்தி மூன்று வருடங்களுக்குப் பிறகு முழுமையாக முஹம்மத் ﷺ அவர்களின் ஆளுகையின் கீழ் வந்தது. இஸ்லாமை எதிர்த்தவர்கள் தோற்றுப் போய்விட்டார்கள். பகைத்தவர்கள் பதுங்கிவிட்டார்கள். கலகம் பண்ணியவர்கள் காணாமல் போய்விட்டார்கள். தொல்லைகள் கொடுத்தவர்கள் தொலைந்து விட்டார்கள். பல தலைவர்கள், தளபதிகள் நாட்டை விட்டும் ஓடிவிட்டார்கள். பிரமுகர்கள் தலைமறைவாகி விட்டார்கள். மக்கள் திறந்த வெளியில் கைதிகள் போல் நடுங்கிக் கொண்டிருந்தார்கள். பழிவாங்கப்படுவோமா, தெருத்தெருவாக இழுத்துச் செல்லப்படுவோமா என்று அச்சத்தில் உறைந்திருந்தார்கள்.

24. அறிவிப்பாளர்: ஜுபைர் இப்னு முத்இம் ؓ, நூல்: ஸுனனுத் திர்மிதி எண்: 1585, ஸஹீஹ் முஸ்லிம் எண்: 2530.

25. முஹம்மத் ﷺ அவர்களுடைய, இன்னும் முஸ்லிம்களுடைய பூர்வீக நகரம்.

அம்மக்கள் மத்தியில் முஹம்மத் நபி ﷺ அவர்கள் பேசும்போது, மக்களே! நான் உங்களிடம் எவ்விதம் நடந்து கொள்வேன் என்று கருதுகிறீர்கள் என கேட்டார்கள். நல்ல முறையில் நடந்து கொள்வீர்கள்! நீங்கள் எங்களுக்கு சிறந்த சகோதரராகவும் எங்களில் சிறந்த சகோதரரின் மகனாகவும் இருக்கிறீர்கள் என மக்கள் பதில் கூறினார்கள்.

ஆம்! (யூசுஃப் நபியை கொலை செய்வதற்கு அவரது சகோதரர்கள் பல சதிகளும் முயற்சிகளும் செய்து தோற்றுப் போய் இறுதியில் யூசுஃப் நபிக்கு முன்னால் வந்து நின்றபோது) "இன்றைய தினம் உங்கள் மீது எந்தக் குற்றமும் இல்லை. அல்லாஹ் உங்களை மன்னிப்பான். அவன் கருணையாளர்களில் எல்லாம் மிகப்பெரும் கருணையாளன்" என்று கூறினார்.[26]

இதைத்தான் நானும் உங்களுக்கு கூறுவேன். நீங்கள் எவ்விதத்திலும் பழிக்கப்பட மாட்டீர்கள். நீங்கள் மன்னிக்கப்பட்டவர்கள். நீங்கள் சுதந்திரமானவர்கள் என நபி ﷺ அவர்கள் அந்த மக்களுக்கு கூறி அவர்களை அனுப்பி வைத்தார்கள்.[27]

உயிருக்கும் உடமைகளுக்கும் சேதம் ஏற்படுத்தி, பல போர்களை தொடுத்து, பல்வேறு இழப்புகளை ஏற்படுத்திய மக்கா நகர மக்களுக்கு முஹம்மத் ﷺ அவர்கள் பொது மன்னிப்பு வழங்கினார்கள். அந்த மக்கள் முஹம்மத் ﷺ அவர்களின் குணங்களை அறிந்திருந்த காரணத்தால், நீங்கள் நல்ல முறையில் நடந்து கொள்வீர்கள்; நீங்கள் எங்களுக்கு சிறந்த சகோதரராகவும், எங்களில் சிறந்த சகோதரரின் மகனாகவும் இருக்கிறீர்கள் என ஒத்தக்குரலில் முழங்கினார்கள். இதுதான் முஹம்மத் ﷺ அவர்கள் கற்பித்துக் கொடுத்த சமூக நல்லுறவும் மத நல்லிணக்கமும் ஆகும்.

----

26. பார்க்க அல்குர்ஆன் 12 : 92.

27. அறிவிப்பாளர்: அபூஹுரைரா, அஸ்ஸுனனுல் குப்ரா லில்பைஹகீ எண்: 18275.

## யூதர்களுடன் முஹம்மத் நபி ﷺ அவர்களின் நட்புறவு

முஹம்மத் ﷺ அவர்களது வாழ்வில் யூதர்கள் இன்னும், கிறிஸ்தவர்களுடனான உறவு என்பது இஸ்லாமின் ஆரம்ப காலத்திலேயே தொடங்கி விட்டது. யூதர்கள் இன்னும் கிறிஸ்தவர்களை அல்குர்ஆன் அஹ்லுல் கிதாப் -“வேதத்தை உடையவர்கள்” என கண்ணியமாக அழைக்கிறது. யூதர்களை, பனூ இஸ்ராயீல் -இஸ்ராயீலுடைய சந்ததிகள், இஸ்ரவேலர்கள் என்றும் அழைக்கிறது.

இஸ்ஹாக் எனும் இறைத்தூதரை இஸ்ராயீல் என அழைக்கப்படுவதுண்டு. அவரது பரம்பரையிலிருந்து யூதர்கள் வருவதனால் இஸ்ராயீலின் சந்ததியினரே என கௌரவத்தோடு அவர்களை முஹம்மத் ﷺ அவர்கள் அழைத்துப் பேசினார்கள்.

அரசியல் அபிவிருத்தி, இன்னும் சமூக, பொருளாதார அபிவிருத்தியை நோக்கமாகக் கொண்டு யூதர்களுடன் நட்புறவை நபி ﷺ அவர்கள் மேற்கொண்டார்கள்.

பனூ கைனுகா, பனூ நழீர், பனூ குறைழா என பிரதான மூன்று யூத கோத்திரங்கள் மதீனாவில் காணப்பட்டார்கள். நபி ﷺ அவர்கள் யூதர்களுடன் மதச்சார்பற்ற மதச்சுதந்திரமுள்ள ஒப்பந்தமொன்றை கையொப்பமிட்டு வாழ்வுரிமையையும் மதவுரிமையையும் உறுதிப்படுத்தினார்கள். இரு சாராரின் ஒப்புதலுடன் பின்வரும் விஷயங்கள் ஒப்பந்தத்தில் இடம் பெற்றன.[28]

1) மதீனாவின் அவ்ஃப் கிளையினரைச் சேர்ந்த யூதர்கள், முஸ்லிம்களுடன் இணைந்த ஒரே சமுதாயத்தினராகக் கருதப்படுவார்கள். யூதர்களுக்கு அவர்களது மார்க்கத்தில் முழு உரிமை உண்டு. முஸ்லிம்களுக்கும் அவர்களுடன்

28. நூல்: ஸாதுல் மஆத்.

நட்பு கொண்டவர்களுக்கும் அவர்களின் மார்க்கத்தில் முழு சுதந்திரம் உண்டு. இவ்வாறே அவ்ஃப் கிளையினரை சாராத மற்ற யூதர்களுக்கும் அவர்களது மார்க்கத்தில் முழு சுதந்திரம் உண்டு.

2) யூதர்கள் தங்களின் செலவுகளுக்கு தாங்களே பொறுப்பாளிகள் ஆவார்கள். அவ்வாறே முஸ்லிம்களும் தங்களின் செலவுகளுக்கு தாங்களே பொறுப்பாளிகள் ஆவார்கள்.

3) இந்த உடன்படிக்கை உடையவர்களிடம் யார் போர் தொடுத்தாலும் அவருக்கு எதிராக முஸ்லிம்களும், யூதர்களும் தங்களுக்குள் ஒருவர் மற்றவருக்கு உதவ வேண்டும்.

4) யூதர்களுக்கும், முஸ்லிம்களுக்கும் இடையிலுள்ள தொடர்பு, “நலம் நாடுதல், ஒருவருக்கொருவர் நல்லுபதேசம் செய்தல், உபகாரம் புரிதல்” என்ற அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும். குற்றம் புரிவதில் ஒருவர் மற்றவருக்கு துணை போகக் கூடாது.

5) ஒருவர், தனது நண்பனின் குற்றத்திற்காக குற்றவாளியாக ஆக்கப்பட மாட்டார்.

6) அநீதி இழைக்கப்பட்டவர்களுக்கு உதவி செய்ய வேண்டும்.

7) பிறருக்கு எதிரான போரில் முஸ்லிம்களுடன் யூதர்கள் கலந்துகொள்ளும்போது யூதர்களும் போர் செலவுகளில் பங்கெடுக்க வேண்டும்.

8) இவ்வுடன்படிக்கையில் கலந்து கொள்பவர்கள் மதீனாவில் குழப்பம் விளைவிப்பதோ, விஷமத்தனம் செய்வதோ, இரத்தம் ஓட்டுவதோ, கலகம் செய்வதோ முற்றிலும் தடுக்கப்பட்டதாகும்.

9) இந்த உடன்படிக்கையில் கலந்துக் கொண்டவர்களுக்கு மத்தியில் ஆபத்தான சண்டை சச்சரவுகள்; அல்லது, ஏதும் பிரச்சனைகள் நிகழ்ந்தால் அதற்குரிய முடிவை அல்லாஹ்வும்

அவனது தூதர் முஹம்மது ﷺ அவர்களுமே கூறுவார்கள்.

10) மக்காவிலுள்ள குறைஷிகளுக்கும், குறைஷிகளுக்கு உதவி செய்பவர்களுக்கும் பாதுகாப்பு கொடுக்கக் கூடாது.

11) யாராவது மதீனாவின் மீது முற்றுகையிட்டால் அவர்களுக்கு எதிராக அனைவரும் போர் புரிய வேண்டும்; தங்களுக்குள் உதவி செய்து கொள்ள வேண்டும்; ஒவ்வொருவரும் தாங்கள் இருக்கும் பகுதியைப் பாதுகாக்க வேண்டும்.

12) இந்த உடன்படிக்கை, அநியாயக்காரனையும் குற்றவாளியையும் தண்டனையிலிருந்து பாதுகாக்காது.

இஸ்லாமிய வரலாற்றில் முதன் முதலாக முஸ்லிமல்லாத மக்களுடன் நடந்த உடன்படிக்கையாகும் இது. மதீனா, இறையாண்மையுள்ள நாடாக விளங்கியது போன்று, மதச் சுதந்திரம், அரசியல் சுதந்திரம், குடிபெயர்வதற்கான சுதந்திரம், பொருளாதார சுதந்திரம் உடைய நாடாகவும் விளங்கியது. தேசிய பாதுகாப்பிலும் சமூக பங்களிப்பிலும் நாட்டின் அபிவிருத்தியிலும் யூதர்களும் முஸ்லிம்களும் சமமாக பங்களிப்புச் செய்ய வேண்டும் என்பது இவ்வுடன்படிக்கையின் முக்கிய பலனாக எதிர்பார்க்கப்பட்டது. மதீனாவில் பயம், அச்சம், மற்றும் குழப்பமின்றி யூதர்கள் வாழ்வதற்கான சூழலும் அவர்களுக்கு உருவாக்கிக் கொடுக்கப்பட்டது.

இத்தகைய நல்லிணக்கத்தை நபி ﷺ அவர்களும் அவர்களது தோழர்களாகிய முஸ்லிம்களும் யூதர்களுடன் எவ்வாறு பேணி வாழ்ந்தார்கள் என்பதற்கான சில முக்கிய நிகழ்வுகளைப் பாருங்கள்.

### அல்லாஹ், மூஸா நபிக்கு கொடுத்த வெற்றியை நபி ﷺ அவர்கள் கண்ணியப்படுத்துதல்

பிறை 10 முஹர்ரம் மாதம் ஆஷூரா எனும் தினத்தில் யூதர்கள் நோன்பு நோற்பதை நபி ﷺ அவர்கள் கண்டார்கள். நீங்கள்

இந்த நாளில் ஏன் நோன்பு நோற்கிறீர்கள் என கேட்டார்கள். இந்த நாளில்தான் இஸ்ரவேலர்களை அவர்களுடைய எதிரிகளிடமிருந்து அல்லாஹ் காப்பாற்றினான். ஆகவே, மூஸா நபி இந்த நாளில் நோன்பு நோற்றார்கள். நாங்களும் அதற்காக நோன்பு நோற்கிறோம் என யூதர்கள் கூறினார்கள்.

உங்களை விட மூஸா நபிக்கு நாங்கள் உரிமை உள்ளவர்கள் எனக்கூறி தாமும் நோன்பு நோற்று முஸ்லிம்களையும் அந்த நாளில் நோன்பு நோற்குமாறு முஹம்மத் ﷺ அவர்கள் கூறினார்கள்.[29]

## நபி ﷺ அவர்கள், யூதர்களுடன் கொடுக்கல் வாங்கல் செய்தல்

மதீனாவில் தண்ணீர் தட்டுப்பாடு இருந்தது. மக்கள் அருந்துவதற்கு போதுமான நீர்நிலைகள் இருக்கவில்லை. கிணறுகளும் குறைவாக இருந்தன. அப்போது யூதர் ஒருவருக்கு சொந்தமான ரூமா எனும் கிணற்றிலிருந்துதான் நீர் பெறவேண்டியிருந்தது. அந்த கிணற்றை மக்களின் பொது பயன்பாட்டுக்கு விடுவதற்கு அந்த யூதர் தயாராக இருக்கவில்லை.

அக்கிணற்றை விற்பதாக அந்த யூதர் விலை பேசினார். அக்கிணற்றை வாங்கி மக்களின் பயன்பாட்டுக்கு விடுபவருக்கு அல்லாஹ்விடம் சொர்க்கம் கிடைக்கும் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள். உடனே நபியவர்களின் மருமகனார் உஸ்மான் ؓ அக்கிணற்றை வாங்கி பொதுமக்களின் பயன்பாட்டுக்காக அர்ப்பணித்தார்கள்.[30]

## நபி ﷺ அவர்கள், யூதர்களிடம் வட்டியில்லா முறையில் அடகு வைத்தல்

கொடுக்கல் வாங்கல் மற்றும் வியாபாரத்தின்போது வட்டியை தொடர்புபடுத்துவதிலிருந்து நபி ﷺ அவர்கள் முஸ்லிம்களை

29. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 2004, ஸஹீஹ் முஸ்லிம் எண்: 1134.

30. அறிவிப்பாளர்: அபூ அப்துர் ரஹ்மான் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 2778.

தடுத்தார்கள். வட்டி இல்லாத முறையில் பொருளாதாரத்தை வழிநடத்தினார்கள். மதீனாவில் யூதர்கள் வட்டியை அடிப்படையாகக் கொண்ட கொடுக்கல் வாங்கலில் ஈடுபட்டாலும் நபி ﷺ அவர்கள் வட்டியில்லாத முறையில் யூதர்களிடம் கொடுக்கல் வாங்கல் செய்தார்கள்.

ஒருமுறை நபி ﷺ அவர்களுக்கு தனது குடும்பத்தினரின் உணவு தேவைக்காக கோதுமை தேவைப்பட்டபோது, தன் கவச ஆடையை யூதர் ஒருவரிடம் அடமானமாக வைத்துவிட்டு அவரிடம் இருந்து தேவையான அளவு கோதுமையை கடனாக பெற்றார்கள்[31]

## நபி ﷺ அவர்கள், யூதர் ஒருவருக்கு பேரீச்சமர கன்றுகளை நட்டுக் கொடுத்தல்

ஸல்மான் ஃபார்ஸி என்பவர் பாரசீகத்தை பிறப்பிடமாகக் கொண்டு அக்னி ஆராதனை செய்யும் கொள்கையில் பிறந்து வளர்ந்தவர். இவர், கிறிஸ்தவ பாதிரியார் மூலம் கிறிஸ்தவ கொள்கையை அறிந்த பின் கிறிஸ்தவராக மாறினார். அப்பாதிரியார் மரணிக்கும்போது இறுதி நபி குறித்தும் அவரது அங்க அடையாளங்கள் குறித்தும் ஸல்மானுக்கு எடுத்துச் சொன்னார். இறுதி நபி பற்றி தெரிந்துக் கொள்ளும் பயணத்தில் அவர் மதீனா வரும் வழியில் யூதர் ஒருவரிடம் அடிமையாக விற்கப்பட்டார். முஹம்மத் ﷺ அவர்கள் மதீனாவுக்கு இறைத்தூதராக வந்துள்ளார் என்ற செய்தி அறிந்ததும் அவர் முஹம்மத் ﷺ அவர்களை அறிந்து கொள்ள வந்தார். பாதிரியார் சொன்ன அங்க அடையாளங்களைக் கண்டு கொண்டதும் முஹம்மத் ﷺ அவர்களை விசுவாசம் கொண்டு இஸ்லாமை ஏற்றுக் கொண்டார். ஸல்மான் رضي الله عنه அவர்களை அடிமைத்தனத்திலிருந்து விடுதலை செய்ய வேண்டுமானால் முன்னூறு பேரீத்தங் கன்றுகளை தனக்கு தருவதுடன், தனது தோட்டத்தில் அவற்றை நட்டுத்தர வேண்டும் என அந்த யூத எஜமானர் நிபந்தனையிட்டார். அந்த நிபந்தனைகளை

31. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் رضي الله عنه, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 2069.

ஏற்று அதனடிப்படையில் முஹம்மத் நபி ﷺ அவர்கள் தமது தோழர்களுடன் சேர்ந்து முன்னூறு பேரீத்தங் கன்றுகளை நட்டுத் தந்தார்கள். ஸல்மான் ؓ அவர்களும் விடுதலைப் பெற்றார்கள்.[32]

### நபி ﷺ அவர்கள், யூதச் சிறுவரை நலம் விசாரித்தல்

நபி ﷺ அவர்களின் பணியாளர்களில் யூதச் சிறுவரும் ஒருவர் இருந்தார். அந்த யூதச் சிறுவர் நோயுற்றார். அவரை நலம் விசாரிக்க நபி ﷺ அவர்கள் வந்தார்கள். அவருடைய தலைமாட்டில் அமர்ந்து, இஸ்லாமை ஏற்றுக்கொள்! என்றார்கள். உடனே அவர் தன்னருகிலிருந்த தந்தையைப் பார்த்தார். அப்போது அவர், அபுல்காஸிம் முஹம்மத் ﷺ அவர்களின் வார்த்தைக்குக் கட்டுப்படு என்றார் அச்சிறுவரும் இஸ்லாமை ஏற்று, பிறகு சிறிது நேரத்தில் மரணித்து விட்டார். நபி ﷺ அவர்கள், என் மூலம் இவரை நரகத்திலிருந்து பாதுகாத்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் எனக் கூறி அல்லாஹ்வை புகழ்ந்தார்கள்.[33]

நபி ﷺ அவர்கள், யூதர்களின் இந்த குடும்பத்தார் மீது வைத்திருந்த மதிப்பும் மரியாதையும் இதன் மூலம் தெளிவாகிறது. அந்த சிறுவரை சந்திக்க சென்றபோது அவர் மரணத்தருவாயில் இருக்கிறார் என்பதை அறிந்தவுடன் அவருக்கு இஸ்லாமின் பக்கம் அழைப்பு கொடுக்க அந்த சந்தர்ப்பத்தை நபியவர்கள் பயன்படுத்திக் கொண்டார்கள்.

### யூதர்கள், நபி ﷺ அவர்களின் பிரார்த்தனையை எதிர்பார்த்தல்

ஒரு முஸ்லிம் தும்மினால் "அல்ஹம்து லில்லாஹ்" (அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்) எனக் கூற வேண்டும். அதனை செவியுறுகிற மற்ற முஸ்லிம் "யர்ஹமுகல்லாஹு" (அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிவானாக) எனக் கூறவேண்டும்.

32. அறிவிப்பாளர்: ஸல்மான் ؓ, நூல்: முஸ்னது அஹ்மது எண்: 23737.

33. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 1356.

தும்மிய முஸ்லிம் மறுபடியும் "யஹ்தீகுமுல்லாஹு வயுஸ்லிஹு பாலகும்" (அல்லாஹ் உங்களை நேர்வழியில் செலுத்துவானாக! உங்கள் காரியங்களை சீர்படுத்துவானாக!) எனக் கூற வேண்டும். இந்த பண்பாட்டை விளங்கிக் கொண்ட யூதர்கள் நபி ﷺ அவர்களின் முன்னிலையில் தும்மிவிட்டு, முஹம்மத் ﷺ தங்களுக்காக பிரார்த்திக்க வேண்டும் என விரும்புவார்கள். அப்போது நபியவர்கள் "யஹ்தீகுமுல்லாஹு வயுஸ்லிஹு பாலகும்" (அல்லாஹ் உங்களை நேர்வழியில் செலுத்துவானாக! உங்கள் காரியங்களை சீர்படுத்துவானாக!) எனக் கூறுவார்கள்.[34]

## நபி ﷺ அவர்களது மனைவியர் யூதப் பெண்ணுக்கு உதவி புரிதல்

ஒரு யூதப் பெண் நபி ﷺ அவர்களின் மனைவி ஆயிஷா ؓ அவர்களிடம் வந்து தனக்கு ஏதும் தருமாறு கேட்டார். அவருக்கு ஆயிஷா ؓ தன்னிடமுள்ளதைக் கொடுத்து உதவிப் புரிந்தார்கள். அப்போது அப்பெண் உங்களை அல்லாஹ் மண்ணறை வேதனையிலிருந்து பாதுகாப்பானாக எனக் கூறிவிட்டுச் சென்றார்.[35]

மண்ணறை வேதனை மற்றும் அதனோடு தொடர்பான விஷயங்களை யூதர்கள் நன்கறிந்திருந்தனர். இது இறைத்தூதர்கள் மூலம் கற்பிக்கப்பட்ட விஷயங்களில் உள்ளதாகும். முஸ்லிம்களும் மண்ணறை வாழ்வை நம்புகிறார்கள் என்பதற்காகவே யூதப் பெண், ஆயிஷா ؓ அவர்களுக்கு இத்தகைய பிரார்த்தனையை செய்தார்.

## நபி ﷺ அவர்கள், நிலம் தொடர்பான வழக்கில் யூதருக்கு சாதமாக தீர்ப்பளித்தல்

அஷ்அஸ் இப்னு கைஸ் என்ற முஸ்லிமுக்கும் ஒரு யூதருக்குமிடையில் ஒரு நிலம் தொடர்பான சர்ச்சை வந்தபோது

34. அறிவிப்பாளர்: அபூ மூஸா ؓ, நூல்: ஸுனனுத் திர்மிதி எண்: 2739.
35. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: முஸ்னது அஹ்மது எண்: 26008.

அந்த வழக்கு நபி ﷺ அவர்களிடம் கொண்டு வரப்பட்டது. அது பற்றி அந்த முஸ்லிம் கூறும்போது,

எனக்கும் ஒரு யூதருக்குமிடையே ஒரு நிலம் குறித்து தகராறு இருந்து வந்தது. அந்த யூதர் என் உரிமையை மறுத்தார். நான் நபி ﷺ அவர்களிடம் வழக்கைக் கொண்டு சென்றேன். இறைத்தூதர் ﷺ அவர்கள், உன்னிடம் ஆதாரம் ஏதும் உண்டா என்று கேட்டார்கள். இல்லை என்று கூறினேன்.

அந்த யூதரிடம் நபி ﷺ அவர்கள், நிலம் உன்னுடையது என்பதற்கு இரு சாட்சிகள் வேண்டும் அல்லது நீ சத்தியம் செய்ய வேண்டும் என்று கூறினார்கள். இறைத்தூதர் அவர்களே! அப்படியென்றால், அவர் எது பற்றியும் பொருட்படுத்தாமல் சத்தியம் செய்து என் செல்வத்தை எடுத்துச் சென்று விடுவாரே என்று நான் கூறினேன். மற்றவரின் சொத்தை உரிமையாக்கிக் கொள்வதற்காக பொய் சத்தியம் செய்கிறவர் அல்லாஹ் அவர் மீது கோபம் கொண்ட நிலையில் கெட்டவராக மறுமையில் அல்லாஹ்வை சந்திப்பார் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

அப்போது, "அல்லாஹ்விடம் செய்த ஒப்பந்தத்தையும் தம் சத்தியங்களையும் சொற்ப விலைக்கு விற்பவர்களுக்கு மறுமையில் எவ்வித நற்பேறுமில்லை. இறுதித் தீர்ப்பு நாளில் அல்லாஹ் அவர்களிடம் பேசவும் மாட்டான்; அவர்களைப் பார்க்கவும் மாட்டான்; அவர்களைத் தூய்மைப்படுத்தவும் மாட்டான். மாறாக, அவர்களுக்குத் துன்புறுத்தும் தண்டனைதான் இருக்கிறது" என்ற பொருள் உடைய வசனத்தை அல்லாஹ் இறக்கினான்.[36] (அல்குர்ஆன் 3:77)

## தகுந்த ஆதாரமின்றி யூதர்கள் மீது குற்றம் சுமத்துவதை நபி ﷺ அவர்கள் தவிர்த்தல்

ஒரு சமயம் அப்துல்லாஹ் رضي الله عنه, மற்றும் முஹய்யிஸா رضي الله عنه என்ற இரண்டு நபித்தோழர்கள் மதீனாவிலிருந்து யூதர்கள் அதிகமாக வாழும் கைபர் எனும் பகுதிக்குச் சென்றார்கள். அங்கிருந்த ஒரு

36. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் رضي الله عنه, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 2666, 2669.

பேரீச்சந் தோட்டத்திற்கு சென்றதும் இருவரும் தனித்தனியாக பிரிந்து சென்றனர். அவ்வேளையில் முஹய்யிஸா என்பவர் கொலை செய்யப்பட்டு ஒரு குழியில் அல்லது நீர் நிலையில் இரத்த வெள்ளத்தில் காணப்பட்டார். யூதர்களிடம் சென்று இவரை கொன்றவர் யார் என்று அப்துல்லாஹ் விசாரிக்க அல்லாஹ்வின் மீது ஆணையாக நாங்கள் அவரை கொல்லவில்லை என யூதர்கள் கூறினர். கொல்லப்பட்ட முஹய்யிஸா ﵁ அவர்களை அங்கு நல்லடக்கம் செய்து விட்டு அப்துல்லாஹ் மதீனா வந்து கொல்லப்பட்டவரின் குடும்பத்தாரிடம் விவரங்களை கூறினார்.

பிறகு, அக்குடும்பத்தாரில் இருவரும் அப்துல்லாஹ்வும், முஹம்மத் நபி ﷺ அவர்களிடம் வந்து முறையிட்டனர். வழக்கை விசாரித்த நபி ﷺ அவர்கள், யூதர்கள்தான் முஹய்யிஸாவை கொன்றார்கள் என்று சத்தியம் செய்து கொலையாளிகளிடமிருந்து இழப்பீட்டு தொகையை பெறுகிறீர்களா? அல்லது, கொலைக்கு கொலை எனும் பழிவாங்கும் உரிமையை பெறுகிறீர்களா? எனக் கேட்டார்கள்.

அதற்கவர்கள், அல்லாஹ்வின் தூதரே! கொலை நடந்த இடத்தில் நாங்கள் இருக்கவுமில்லை. சம்பவத்தை நேரில் பார்க்கவுமில்லை என்றிருக்கும்போது நாங்கள் எப்படி சத்தியம் செய்ய முடியும் எனக் கூறினார்கள்.

அப்படியாயின் யூதர்களில் ஐம்பது பேர் நாங்கள் கொலை செய்யவில்லை என சத்தியம் செய்து, தாங்கள் நிரபராதி என நிரூபிக்கட்டும் என்றார்கள். அல்லாஹ்வின் தூதரே! யூதர்கள் இஸ்லாமை ஏற்காத இறைமறுப்பாளர்கள். அவர்களின் சத்தியத்தை எப்படி ஏற்பது என கேட்டார்கள்

(தகுந்த சாட்சியங்கள் இல்லாததன் காரணமாக) கொல்லப்பட்டவரின் குடும்பத்தாருக்கு அரசு நிதியிலிருந்து நூறு ஒட்டகங்களை இழப்பீட்டுத் தொகையாக நபி ﷺ அவர்கள் வழங்கினார்கள். (யூதர்களை அவ்வழக்கிலிருந்து விடுவித்தார்கள்).[37]

37. அறிவிப்பாளர்: சஹ்ல் இப்னு அபீஹஸ்மா ﵁, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 3173.

## நபி ﷺ அவர்கள், யூதர்களுக்கு மத்தியில் தவ்ராத் வேதத்தில் உள்ள சட்டத்தின்படி தீர்ப்பளித்தல்

விபச்சாரம் புரிந்துவிட்ட ஒரு யூத ஆணும் ஒரு யூதப் பெண்ணும் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களிடம் கொண்டு வரப்பட்டனர். "விபச்சாரம் செய்துவிட்டவனுக்கு அளிக்கப்படும் தண்டனை குறித்து நீங்கள் உங்களுடைய தவ்ராத் (வேதத்)தில் என்ன காண்கிறீர்கள்?" என்று யூதர்களிடம் அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கேட்டார்கள்.

அதற்கு யூதர்கள், விபச்சாரம் புரிந்த இருவர் முகத்திலும் கரி பூசி, அவர்கள் இருவரையும் ஒட்டகத்தில் ஏற்றி, முகம் திருப்பி உட்காரவைத்து ஊரைச் சுற்றிக் கொண்டு வரப்பட வேண்டும் என்றார்கள்.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள், நீங்கள் உண்மையாளர்களாயின் (உங்களுடைய வேதமான) தவ்ராத்தைக் கொண்டு வாருங்கள் என்று சொன்னார்கள். யூத இளைஞர் ஒருவர் தவ்ராத்தைக் கொண்டுவந்து வாசித்துக் காட்டினார். கல்லெறிந்து தண்டனை வழங்கும் சட்ட வசனம் வந்தபோது, அவ்வசனத்தின் மீது தமது கையை வைத்து மறைத்துக் கொண்டு, அதற்கு முன்பும் பின்பும் உள்ள வசனங்களை வாசித்தார்.

அப்போது அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடன் (யூத மத அறிஞராக இருந்து இஸ்லாமை ஏற்றிருந்த) அப்துல்லாஹ் இப்னு சலாம் رضي الله عنه அவர்களும் இருந்தார்கள். அவர்கள், (அல்லாஹ்வின் தூதரே), "அவரது கையை எடுக்கச் சொல்லுங்கள்" என்று கூறினார்கள். ஆக, அந்த இளைஞர் தமது கையை எடுத்தார். அங்கே (விபச்சாரக் குற்றத்திற்கு) கல்லெறிந்து தண்டனை நிறைவேற்றும்படி கூறுகிற வசனம் இருந்தது. ஆகவே, அவ்விருவரையும், அவர்கள் சாகும்வரை கல்லால் அடிக்கும்படி அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் உத்தரவிட்டார்கள். அவ்வாறே, அவ்விருவருக்கும் கல்லெறி தண்டனை வழங்கப்பட்டது.[38]

38. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு உமர் رضي الله عنهما, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் எண்: 1699.

யூதர்கள் தங்களது மதக் கொள்கைக்கு முரணாகவே சட்டத்தை நடைமுறைப்படுத்தி வந்தார்கள். தங்களது விவகாரத்தில் தீர்ப்பு வழங்கும்படி கோரியபோது அவர்களது வேதத்தில் உள்ளபடி தனியார் மற்றும் குற்றவியல் தண்டனைகளை வழங்கிடுமாறு நபி ﷺ அவர்கள் வழிகாட்டினார்கள்.

யூதன் ஒருவன், சிறுமி ஒருத்தியின் தலையை இரு கற்களுக்கிடையே வைத்து நசுக்கி விட்டான். அந்தச் சிறுமியிடம் உன்னை இப்படி செய்தவன் யார், இன்னாரா? இன்னாரா? என்று மக்கள் விசாரித்தார்கள். குறிப்பிட்ட அந்த யூதனின் பெயர் கூறப்பட்டதும் அச்சிறுமி ஆம் எனக்கூறி தனது தலையை அசைத்தாள். அந்த யூதன் பிடிக்கப்பட்டு கொண்டு வரப்பட்டான். அவன் தனது குற்றத்தை ஒப்புக் கொண்டான். நபி ﷺ அவர்கள் அவனது தலையை இரு கற்களுக்கிடையே வைத்து நசுக்கும் படி உத்தரவிட, அவ்வாறே அவனது தலை நசுக்கப்பட்டது.[39]

பழிக்குப் பழி எனும் யூத மதச்சட்டத்தின் படியே இந்த தண்டனையையும் நபி ﷺ அவர்கள் நிறைவேற்றினார்கள்.

### யூதர்கள், நபி ﷺ அவர்களுக்கு ஸலாம் கூறுவதற்கு பதிலாக சாபமிடுதலும் அதற்கு நபியவர்கள் அழகிய முறையில் பதிலளித்தலும்

முஸ்லிம்களில் ஒருவர், மற்றவரை சந்திக்கும்போது அஸ்ஸலாமு அலைக்கும் என முகமன் கூறுவார்கள். இதன் பொருள்: உங்கள் மீது சாந்தி உண்டாகுக! என்பதாகும். ஆனால் யூதர்கள், முஸ்லிம்களை பார்க்கும்போது இவ்வார்த்தையை அஸ்ஸாமு அலைக்கும் என மாற்றி கூறுவார்கள். இதன் பொருள்: உங்கள் மீது மரணம் உண்டாகட்டும் என்பதாகும்.

யூதர்களில் ஒரு கூட்டத்தினர் நபி ﷺ அவர்களிடம் வந்து அஸ்ஸாமு அலைக்கும் எனக் கூறினார்கள். அவர்கள் கூறியதை விளங்கிக் கொண்ட ஆயிஷா رضي الله عنها அவர்கள்

39. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் رضي الله عنه, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 2413.

(கோபத்தில்) உங்கள் மீதும் மரணமும் சாபமும் உண்டாகட்டும் எனக் கூறினார்கள். அப்போது நபி ﷺ அவர்கள், ஆயிஷாவே! நிதானம் வேண்டும். அனைத்துக் காரியங்களிலும் மென்மையான போக்கை கடைப்பிடிப்பதையே அல்லாஹ் விரும்புகிறான் எனக் கூறினார்கள். அல்லாஹ்வின் தூதரே! அவர்கள் கூறியதை நீங்கள் செவியுறவில்லையா? என ஆயிஷா ﵂ கேட்டார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள் 'அலைக்கும்' (உங்கள் மீதும் உண்டாகட்டும்) என நான் பதில் கூறிவிட்டேனே எனக் கூறினார்கள்.[40]

அஸ்ஸலாமு - அஸ்ஸாமு எனும் இரு வார்த்தையின் உச்சரிப்பு ஒன்றுப் போலவே தெரியும். ஆனால் சரியாக விளங்கினால் வார்த்தையிலுள்ள விபரீதம் புரிய வரும். வார்த்தைகளை வைத்து யூதர்கள் விளையாடுவார்கள். வீணான பிரச்சனைகளை தவிர்ப்பதற்காகவும் சண்டை சச்சரவுகள் உருவாகாமல் தடுப்பதற்காகவும் நபி ﷺ அவர்கள் முஸ்லிம்களுக்கு பின்வருமாறு கட்டளையிட்டார்கள்.

வேதக்காரர்களுக்கு நீங்கள் முதலில் ஸலாம் கூற முந்திக் கொள்ளாதீர்கள். அவர்களில் ஒருவரை நீங்கள் சாலையில் சந்தித்தால் சாலையின் ஓரத்தில் அவரை ஒதுங்கிப் போகச் செய்யுங்கள் எனக் கூறினார்கள்.[41]

## நபி ﷺ அவர்கள், யூதர்களின் இறைத்தூதருக்கு மரியாதை கொடுத்தல்

முஸ்லிம் சமுதாயத்தை சேர்ந்த ஒருவரும் யூத சமுதாயத்தை சேர்ந்த ஒருவரும் வாய்ச்சண்டை போட்டுக் கொண்டனர். அப்போது அகிலத்தாரை விட முஹம்மதை தேர்வு செய்த இறைவன்மேல் ஆணையாக என்று முஸ்லிம் குறிப்பிட்டார். 'அகிலத்தாரை விட மூஸாவை தேர்வு செய்த இறைவன்மேல் ஆணையாக' என்று யூதர் குறிப்பிட்டார். இதை கேட்டதும்

40. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 6024.

41. அறிவிப்பாளர்: அபூஹுரைரா ﵁, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் எண்: 2167.

முஸ்லிம், யூதருடைய முகத்தில் அறைந்து விட்டார். உடனே யூதர், நபி ﷺ அவர்களிடம் வந்து தனக்கும் அந்த முஸ்லிமுக்குமிடையில் நடந்ததை தெரிவித்தார். நபி ﷺ அவர்கள் முஸ்லிமை அழைத்துவரச் செய்து விசாரித்தார்கள். அவரும் நடந்ததை கூறினார். அப்போது நபி ﷺ அவர்கள் மூஸாவை விட என்னை சிறப்பித்துக் கூறாதீர்கள். ஏனெனில், நியாயத் தீர்ப்பு நாளில் மக்கள் அனைவரும் மூர்ச்சையாவார்கள். அவர்களுடன் நானும் மூர்ச்சையாவேன். நான்தான் முதலில் மூர்ச்சையிலிருந்து விழித்தெழுவேன். ஆனால், அப்போது மூஸா, (அல்லாஹ்வின்) அர்ஷ் உடைய ஓரத்தைப் பிடித்துக் கொண்டிருப்பார். அவர் மூர்ச்சையடைந்து எனக்கு முன் விழித்தெழுந்தாரா? அல்லது, அல்லாஹ் யாருக்கு விதிவிலக்கு அளித்தானோ அவர்களில் அவரும் ஒருவராக இருந்தாரா என்பதை நான் அறியமாட்டேன் எனக் கூறினார்கள்.[42]

இறைத்தூதர்களை பாகுபடுத்தக் கூடாது என்பது இஸ்லாமின் முக்கிய விதியாகும். முஸ்லிம், முஹம்மத் நபியையும் யூதர், மூஸா நபியையும் உயர்வாக கருதி பேசியதால் பிரச்சனை எழுந்தது. முஸ்லிம் உடைய செயல்பாட்டை நபி ﷺ அவர்கள் சரிகாணவில்லை. அதேவேளை மறுமையில் மூஸா நபிக்கு கிடைக்கும் அந்தஸ்தை எடுத்துக் கூறவும் தயங்கவில்லை. மதத்தின் பெயரால் பிரிவினையும் பிரச்சனையும் சண்டை சச்சரவும் உருவாகுவதை இதன் மூலம் தடுத்தார்கள்.

## நபி ﷺ அவர்கள், யூதரின் பிரேதத்திற்கு மரியாதை கொடுத்தல்

யூதர் ஒருவரின் பிரேதம் நபி ﷺ அவர்களை கடந்து சென்றபோது நபி ﷺ அவர்கள் எழுந்து நின்றார்கள். அல்லாஹ்வின் தூதரே! இது யூதரின் பிரேதமாயிற்றே எனக் கூறப்பட்டது. அதுவும் ஓர் உயிர்தானே என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[43]

42. அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 2411.
43. அறிவிப்பாளர்: அப்துர் ரஹ்மான் இப்னு அபீ லைலா ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 1312.

## நஞ்சூட்டப்பட்ட உணவை நபி ﷺ அவர்களுக்கு வழங்கிய யூதப் பெண்ணை நபியவர்கள் மன்னித்தல்

கைபர் எனும் பகுதியிலுள்ள ஒரு யூதப் பெண் நபி ﷺ அவர்களுக்கு விருந்து கொடுப்பதாகக் கூறி அழைப்புக் கொடுத்தார். அந்த அழைப்பை ஏற்று நபி ﷺ அவர்களும் வந்தார்கள். அப்போது அப்பெண் நஞ்சூட்டப்பட்ட ஆட்டை உணவாக வழங்கினாள். உணவில் விஷம் கலக்கப்பட்டுள்ளது என்று தெரிந்தவுடன் நபி ﷺ அவர்கள், இங்கே இருக்கும் யூதர்களை ஒன்று திரட்டி என்னிடம் கொண்டு வாருங்கள் என்று கூறினார்கள். அவ்வாறே, அவர்கள் ஒன்று திரட்டி நபி ﷺ அவர்களிடம் கொண்டு வரப்பட்டார்கள். நான் உங்களிடம் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்கப் போகிறேன். நீங்கள் என்னிடம் அதைப் பற்றி உண்மையைச் சொல்வீர்களா? என்று நபி ﷺ அவர்கள், கேட்டார்கள். அதற்கு அந்த யூதர்கள், ஆம்! சொல்கிறோம் என்று பதிலளித்தார்கள்.

'உங்கள் தந்தை யார்?' என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். அதற்கு அவர்கள், இன்னார் என்று பதிலளித்தார்கள். உடனே நபி ﷺ அவர்கள், பொய் சொன்னீர்கள். மாறாக உங்கள் தந்தை இன்னார்தான் என்று கூறினார்கள். அவர்கள், நீங்கள் சொன்னது உண்மைதான் என்று கூறினார்கள்.

'நான் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்டால் அதைப் பற்றி நீங்கள் என்னிடம் உண்மையைச் சொல்வீர்களா?' என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். அவர்கள், ஆம்! சொல்கிறோம், அபுல் காசிமே! இனி நாங்கள் பொய் சொன்னால் எங்கள் தந்தை விஷயத்தில் பொய் சொன்னதை நீங்கள் அறிந்ததைப் போன்றே அதையும் அறிந்துக் கொள்வீர்கள் என்றார்கள்.

'நரகவாசிகள் யார்?' என்று நபி ﷺ அவர்கள், கேட்டார்கள். அவர்கள், நாங்கள் அதில் சில காலம் மட்டுமே இருப்போம். பிறகு, எங்களுக்கு பதிலாக அதில் நீங்கள் புகுவீர்கள் என்று

பதிலளித்தார்கள். நபி ﷺ அவர்கள், அதில் நீங்கள் இழிவுபட்டுப் போவீர்களாக! அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் அதில் உங்களுக்கு பதிலாக ஒருபோதும் புகமாட்டோம் என்று கூறினார்கள்.

பிறகு, 'நான் ஒரு விஷயத்தைப் பற்றி உங்களிடம் கேட்டால் நீங்கள் என்னிடம் உண்மையைச் சொல்வீர்களா?' என்று கேட்டார்கள். அவர்கள், ஆம்!, அபுல் காசிமே! என்று பதிலளித்தார்கள். இந்த ஆட்டில் நீங்கள் விஷம் கலந்திருக்கிறீர்களா? என்று நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். அவர்கள், ஆம் என்று பதில் சொன்னார்கள். நபி ﷺ அவர்கள், 'ஏன் இப்படிச் செய்தீர்கள்?' என்று கேட்டார்கள். நீங்கள் பொய்யராக இருந்து, விஷத்தின் மூலம் இறந்து விட்டால் நாங்கள் மகிழ்ச்சியடைவோம். நீங்கள் இறைத்தூதராக இருந்தால் உங்களுக்கு இந்த விஷம் எந்தத் தீங்கும் செய்யாது என்று பதிலளித்தார்கள்.

இது திட்டமிடப்பட்ட குற்றச்செயல் என்பது நன்கு தெளிவான பின்னரும் விஷம் வைத்த உணவை கொடுத்த யூதர்களை பழிவாங்காது முஹம்மத் ﷺ மன்னித்து விட்டார்கள்.

விஷம் வைத்த அந்த யூதப் பெண்ணை நாங்கள் கொல்லட்டுமா என நபித்தோழர்கள் கேட்டபோது வேண்டாம் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

அப்பெண்ணை பார்த்து நபி ﷺ அவர்கள் "என்னை கொல்லும் அதிகாரத்தை அல்லாஹ் உனக்கு தரவில்லை" எனக் கூறினார்கள்.[44]

## யூதர்கள், நபி ﷺ அவர்களுக்கு சூனியம் செய்தலும் அதை நபி ﷺ அவர்கள் மன்னிப்பதும்

ஆயிஷா ؓ அவர்கள் கூறுவதாவது:

நபி ﷺ அவர்களுக்கு (சூனியம் செய்யப்பட்டதால்) அவர்கள் இப்படி இப்படி நடந்து கொண்டார்கள். அவர்கள் தம் வீட்டாரிடம் செல்லாமலேயே சென்று வந்து விட்டதாகப்

44. அறிவிப்பாளர்: அபூஹுரைரா ؓ, அனஸ் இப்னு மாலிக் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 3169, ஸஹீஹ் முஸ்லிம் எண்: 2190.

பிரமையூட்டப் பட்டார்கள். அவர்கள் ஒருநாள் என்னிடம், ஆயிஷாவே! நான் எந்த விவகாரத்தில் தெளிவைத் தரும்படி அல்லாஹ்விடம் கேட்டுக்கொண்டிருந்தேனோ அதில் அவன் எனக்குத் தெளிவை அளித்துவிட்டான். (நான் உறங்கிக் கொண்டிருந்தபோது கனவில் வானவர்கள்) இரண்டுபேர் என்னிடம் வந்தனர்.

அவர்களில் ஒருவர் என் கால்மாட்டிலும் மற்றவர் என்னுடைய தலைமாட்டிலும் அமர்ந்தனர். அப்போது என் கால்மாட்டில் அமர்ந்திருந்தவர் என் தலைமாட்டில் அமர்ந்திருந்தவரிடம் (என்னை சுட்டிக் காட்டி), "இந்த மனிதரின் நிலை என்ன?" என்று கேட்க, மற்றவர், "இவருக்குச் சூனியம் வைக்கப்பட்டுள்ளது" என்று பதிலளித்தார். முதலாமவர், "இவருக்குச் சூனியம் வைத்தவர் யார்?" என்று கேட்க, மற்றவர், 'லபீத் இப்னு அஃஃஸம்' என்று பதிலளித்தார்.

முதலாமவர், "எதில் (சூனியம் வைக்கப்பட்டுள்ளது)?" என்று கேட்க, மற்றவர், "ஆண் பேரீச்சம் பாளையின் உறை, (தலைவாரும்) சீப்பு, சிக்குமுடி ஆகியவற்றில் (சூனியம்) செய்யப்பட்டு 'தர்வான்' (குலத்தாரின்) கிணற்றில் ஒரு பாறைக்கடியில் வைக்கப்பட்டுள்ளது" என்று பதிலளித்தார்.

ஆகவே, நபி ﷺ அவர்கள் (தம் தோழர்கள் சிலருடன் அந்தக் கிணற்றுக்கு) வந்து (பார்த்துவிட்டு), "இந்தக் கிணறுதான் எனக்குக் (கனவில்) காட்டப்பட்டது. அந்தக் கிணற்றைச் சுற்றியிருந்த பேரீச்சம் மரங்களின் தலைகள் ஷைத்தான்களின் தலைகளைப் போன்றிருந்தன. அந்தக் கிணற்றின் தண்ணீர் மருதாணிச் சாற்றைப் போன்றிருந்தது" என்று சொன்னார்கள்.

நபி ﷺ அவர்கள் உத்தரவிட அது வெளியே எடுக்கப்பட்டது. "அல்லாஹ்வின் தூதரே! அ(ந்தப் பாளை உறை)தனைப் பிரித்துப் பார்க்கவில்லையா?" என்று நான் கேட்டேன். அதற்கு நபி ﷺ அவர்கள் "அல்லாஹ் என்னைக் குணப்படுத்திவிட்டான். நானோ (அதைப் பிரித்துக் காட்டுவதால்) மக்களுக்கெதிராக வன்மத்தைத் தூண்டிவிடுவதை அஞ்சுகிறேன்" என்று சொன்னார்கள்.

(நபி ﷺ அவர்களுக்குச் சூனியம் வைத்த) லபீத் இப்னு அஃஸம், பனூ ஸுரைக் குலத்தாரிலுள்ள ஒருவன் ஆவான். (அவன்) யூதர்களின் நட்புக் குலத்தவன் ஆவான்.[45]

சூனியம் செய்த யூதனைப் பற்றி நபி ﷺ அவர்களிடம் சொன்னபோது நபியவர்களின் முகத்தில் எந்த வெறுப்பும் காணப்படவில்லை. அதாவது, அந்த யூதனை பழிவாங்கவேண்டும் என்ற எந்த அடையாளமும் காணப்படவில்லை.[46]

"சூனியம் செய்யப்பட்ட பொருளை மக்கள் முன்னால் எடுத்துக் காட்டி சமூகத்தில் தீமையைப் பரப்ப நான் விரும்பவில்லை" என்று நபி ﷺ அவர்கள் கூறிய வார்த்தை சமூக நல்லிணக்கத்திற்கு நல்லதொரு படிப்பினையாகும்.

சூனியம் செய்யப்பட்ட பொருளை மக்கள் முன்னிலையில் காண்பிக்கும்போது நபி ﷺ அவர்கள் மீது அன்பு கொண்டுள்ள மக்கள் கொந்தளிக்கவோ, கோபம் கொள்ளவோ வாய்ப்புகள் அதிகம். அதனால் சமூகத்தில் பதற்றங்களும் குழப்பங்களும் உண்டாகலாம். நாட்டில் அமைதியின்மை உருவாகலாம். இரு சமூகங்களுக்கிடையே பிரச்சனைகள் தோன்றலாம். அத்தகைய நிலவரம் நல்லிணக்கத்திற்கு எதிராக அமைந்து விடக்கூடாது என்பதில் நபி ﷺ அவர்கள் கவனமாக இருந்தார்கள்.

மதசகிப்புத் தன்மை, ஒற்றுமை, சமூக உறவு என்பது விட்டுக் கொடுத்தலுடன், சகிப்புத்தன்மையுடன் நடைமுறையில் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு முன்னோடியாக முஹம்மத் ﷺ அவர்கள் திகழ்ந்தார்கள்.

**யூதர்கள், நபி ﷺ அவர்களை விசுவாசம் கொள்ள மறுத்தல்**

இறைத்தூதர்களின் வரிசையில் இறுதியாக ஒரு தூதர் வர இருக்கிறார் என்பதை யூதர்களும் கிறிஸ்தவர்களும் நம்பியிருந்தார்கள். அவர்களது வேதநூலான தோராவும் பைபிளும் இது பற்றி விவரிக்கின்றன.

45. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 6063.

46. அறிவிப்பாளர்: ஜைத் இப்னு அர்கம் ؓ, நூல்: ஸுனன் நஸாயி எண்: 4080.

அத்தூதரை கண்டறியவே அவர்கள் அரேபிய தீபகற்பத்திற்கு வருகைத் தந்தார்கள். முஹம்மத் ﷺ அவர்கள் இறைத்தூதர்தானா என்பதை கண்டறிய யூதர்கள் ஆர்வமாக இருந்தார்கள். முஹம்மத் நபி ﷺ அவர்களிடம் மார்க்க ரீதியாக கேட்கவேண்டிய பல கேள்விகளை கேட்டு பரிட்சித்துப் பார்த்து உண்மையை அறிந்தும் கொண்டார்கள். சிலர், முஹம்மத் நபியை நம்பிக்கைக் கொண்டு முஸ்லிம்களாக மாறினர். பலர் மறுத்தார்கள். தமது யூத இனத்திலிருந்து இத்தூதர் வரவில்லை என்பதற்காகவே அவர்கள் முஹம்மத் நபியை நிராகரித்தார்கள்.

நபி ﷺ அவர்கள் மதீனா வந்தபோது யூத அறிஞரான அப்துல்லாஹ் இப்னு ஸலாம் என்பவர் நபியவர்களிடம் வந்து, சில விளக்கங்களை கேட்டு உறுதி செய்த பின் தாங்கள் அல்லாஹ்வின் தூதர், தாங்கள் சத்திய மார்க்கத்துடன் வந்துள்ளீர்கள் என்று நான் சாட்சி கூறுகிறேன். நான் யூதர்களின் தலைவன், யூதர்களின் தலைவர் உடைய மகன், யூதர்களில் நான் மிகவும் அறிந்தவன், யூதர்களில் மிகவும் அறிந்தவரின் மகன் என்று என்னைப் பற்றி யூதர்கள் அறிந்து வைத்துள்ளார்கள். நான் முஸ்லிமாகி விட்டேன் என்பதை அவர்கள் அறியும் முன்பாக அவர்களை அழைத்து என்னைப் பற்றி அவர்களிடம் கேளுங்கள். ஏனெனில், நான் முஸ்லிமாகி விட்டேன் என்பதை அவர்கள் அறிந்தால் என்னிடம் இல்லாத (குற்றங்கள், குறைகள் முதலிய)வற்றை என்னிடம் இருப்பதாக கூறுவார்கள் என்று சொன்னார்கள்.

யூதர்களை அழைத்து வரும்படி அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் ஆள் அனுப்பினார்கள். யூதர்கள் நபி ﷺ அவர்களிடம் வந்தனர். (உடனே அப்துல்லாஹ் இப்னு ஸலாம் ஓரிடத்தில் மறைந்து கொண்டார்.) அப்போது அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் யூத கூட்டத்தினரே! உங்களுக்கு வந்த கேடே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். எவனைத்

தவிர வேறு இறைவன் இல்லையோ அவன் மீது ஆணையாக! உண்மையில் நான் அல்லாஹ்வின் தூதர்தான், நான் சத்திய மார்க்கத்துடன் உங்களிடம் வந்துள்ளேன் என்று நீங்கள் அறிவீர்கள். எனவே, நீங்கள் முஸ்லிமாகி விடுங்கள் என்று கூறினார்கள். அப்போது யூதர்கள் அத்தகைய தூதர் ஒருவரை நாங்கள் அறிய மாட்டோம் என்று கூறினார்கள். “அத்தகைய தூதர் ஒருவரை நாங்கள் அறிய மாட்டோம்” என்று யூதர்கள் கூறிய வார்த்தையை (திரும்பத் திரும்ப) மூன்று முறை நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.

பிறகு, நபி ﷺ அவர்கள் உங்களிடையே அப்துல்லாஹ் இப்னு ஸலாம் எத்தகைய மனிதர் என்று கேட்டார்கள். அவர் எங்களின் தலைவர், எங்களின் தலைவரின் மகன், எங்களில் மிகப் பெரிய அறிஞர், மிகப் பெரிய அறிஞரின் மகன் என்று யூதர்கள் கூறினார்கள். அவர் இஸ்லாமை தழுவினால் நீங்கள் என்ன செய்வீர்கள் என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள். அதற்கு யூதர்கள், அல்லாஹ் அவரை காப்பாற்றட்டும்; அவர் இஸ்லாமை தழுவ மாட்டார் என்று கூறினார்கள். நபி ﷺ அவர்கள், அவர் இஸ்லாமை தழுவினால் என்ன செய்வீர்கள் என்று மீண்டும் கேட்டார்கள். அல்லாஹ் அவரை காப்பாற்றட்டும்; அவர் இஸ்லாமை தழுவ மாட்டார் என்று கூறினார்கள். அவர் இஸ்லாமை தழுவினால் என்ன செய்வீர்கள் என்று மீண்டும் நபி ﷺ அவர்கள் கேட்டார்கள். அல்லாஹ் அவரை காப்பாற்றட்டும்; அவர் இஸ்லாமை தழுவ மாட்டார் என்று யூதர்கள் கூறினார்கள்.

(அப்போது) நபி ﷺ அவர்கள், அப்துல்லாஹ் இப்னு ஸலாமே! முன்னே வருவீராக என்று சொன்னார்கள். உடனே அப்துல்லாஹ் இப்னு ஸலாம் வெளியே வந்து, யூதர்கள் கூட்டமே! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! எவனைத் தவிர வேறு இறைவன் இல்லையோ அவன் மீது ஆணையாக! இவர்

அல்லாஹ்வின் தூதர்தான் என்பதையும் இவர் சத்தியத்துடன் வந்துள்ளார் என்பதையும் நீங்கள் நன்கு அறிவீர்கள் என்று கூறினார்கள். உடனே யூதர்கள் நீ பொய் சொன்னாய். நீ கெட்டவன். கெட்டவரின் மகன் என்று கூறி அவர் மீது இல்லாத பொல்லாத செய்திகளை கூறினார்கள். உடனே யூதர்களை நபி ﷺ அவர்கள் (அங்கிருந்து) புறப்படச் செய்தார்கள்.[47]

யூத அறிஞர்கள், மற்றும் மத குருமார்கள் முஹம்மத் நபி ﷺ அவர்கள் குறித்து நன்கு அலசி ஆராய்ந்து சத்தியத்தை விளங்கி வைத்திருந்தார்கள். ஆனாலும், மக்களிடம் அந்த உண்மையை சொல்ல அவர்கள் தயாராக இருக்கவில்லை. இது பற்றி நபி ﷺ அவர்கள் குறிப்பிடும்போது:

யூதர்களில் பத்து பேர் என்னை விசுவாசம் கொண்டால் மொத்த யூதர்களும் என்னை விசுவாசம் கொள்வார்கள் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[48]

தங்கள் கொள்கையில் இருப்பவர்கள் மட்டுமே நேர்வழியில் உள்ளவர்கள் என்றும் முஸ்லிம்கள், யூதர்களாகவோ கிறிஸ்தவர்களாகவோ மாறினால் மட்டுமே நேர்வழி பெறுவர் என்றும் யூதர்களும் கிறிஸ்தவர்களும் முஸ்லிம்களுடன் வாதிக்க துவங்கினர். அவர்களது வாதத்திற்கு குர்ஆன் முறையாக பதில் அளித்தது. ஆப்ரஹாம் (இப்றாஹீம்) எனும் இறைத்தூதரை யூதர்கள் விசுவாசிக்கின்றனர். அவரையே மதத்தின் தந்தையாகவும் மதிக்கின்றனர். அவரது பரம்பரையிலிருந்தே யூதர்கள் உருவாகினர். இப்றாஹீம் நபியும் அவரது பிள்ளைகளும் சந்ததியினரும் ஓரிறைக் கொள்கையிலும் இஸ்லாமிய கொள்கையிலும் இருந்தார்கள், தங்களை முஸ்லிம்கள் என்று அழைத்தார்கள், யூத மதமும் கிறிஸ்தவ மதமும் இப்றாஹீம் நபி உருவாக்கியதல்ல என குர்ஆன் விளக்கம் கூறியது.[49]

47. அறிவிப்பாளர்: அனஸ் இப்னு மாலிக் ரலி, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 3329, 3911.

48. அறிவிப்பாளர்: அபூஹுரைரா ரலி, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 3941.

49. பார்க்க அல்குர்ஆன் 2:111 2:131-135 3:65-68.

இந்த கலந்துரையாடலுக்குப் பின் அல்குர்ஆன் உடைய பின்வரும் வசனம் இறங்கியது.

(நபியே!) கூறுவீராக: "நீங்கள் அல்லாஹ்வின் விஷயத்தில் எங்களிடம் தர்க்கிக்கிறீர்களா? அவனோ எங்கள் இறைவனும் உங்கள் இறைவனும் ஆவான்! எங்கள் செயல்கள் (உடைய பலன்) எங்களுக்கு கிடைக்கும். இன்னும் உங்கள் செயல்கள் (உடைய பலன்) உங்களுக்கு கிடைக்கும். நாங்கள் வணக்க வழிபாடுகளை (கலப்பின்றி) அவனுக்கு மட்டும் தூய்மையாக செய்வோம்." (அல்குர்ஆன் 2 : 139)

ஆக, (நபியே! இதற்குப் பின்னும்) அவர்கள் உம்முடன் தர்க்கித்தால் (அவர்களை நோக்கி), நீர் கூறுவீராக: "நிச்சயமாக நான் எனது முகத்தை அல்லாஹ்விற்கு பணிய வைத்தேன். இன்னும், என்னை பின்பற்றியவர்களும் (தங்கள் முகங்களை அல்லாஹ்விற்கு பணிய வைத்தார்கள். நாங்கள் அனைவரும் முழுமையாக இஸ்லாமிய மார்க்கத்தை ஏற்றுக்கொண்டோம்)." இன்னும், "வேதம் கொடுக்கப்பட்டவர்களுக்கும், (சிலை வணங்கும்) பாமரர்களுக்கும் (நபியே) கூறுவீராக: "நீங்களும் (அவ்வாறே உங்கள் முகங்களை) பணியவைக்கிறீர்களா? (-உண்மையான இறைவனாகிய அல்லாஹ்வை மட்டும் வணங்குவீர்களா?)" ஆக, அவர்களும் (தங்கள் முகங்களை அல்லாஹ்விற்கு மட்டும்) பணியவைத்தால் திட்டமாக அவர்கள் நேர்வழி அடைவார்கள். இன்னும், அவர்கள் (இந்த அழைப்பை) புறக்கணித்தால், உம்மீது கடமை எல்லாம் (சத்தியத்தை) எடுத்துச் சொல்வதுதான். அல்லாஹ் (தனது) அடியார்களை உற்று நோக்குபவன் ஆவான். (அல்குர்ஆன் 3 : 20)

முஹம்மத் ﷺ அவர்கள் யூதர்களுடன் மார்க்கம் சம்பந்தமாக, இறைக்கோட்பாடு சம்பந்தமாக கலந்துரையாடினாலும் தர்க்கம் புரிந்தாலும் அதில் எல்லை மீறாமல் நடந்து கொண்டார்கள்.

இறைத்தூதர்கள் அனைவரும் ஓரிறைக் கொள்கையைப் போதித்தார்கள். மதத்தின் அடிப்படையாகிய அக்கொள்கையின் பால் அழைப்பு விடுக்குமாறு நபி ﷺ அவர்களை அல்லாஹ் பணித்தான்.

(நபியே!) கூறுவீராக: “வேதக்காரர்களே! எங்கள் மத்தியிலும் உங்கள் மத்தியிலும் (நீதமான) சமமான ஒரு விஷயத்தின் பக்கம் வாருங்கள்! அதாவது: அல்லாஹ்வைத் தவிர (எவரையும் நீங்களும் நாமும்) வணங்கமாட்டோம்; அவனுக்கு எதையும் (நீங்களும் நாமும்) இணையாக்க மாட்டோம்; அல்லாஹ்வைத் தவிர நம்மில் சிலர் சிலரை வணங்கப்படும் தெய்வங்களாக எடுத்துக் கொள்ளக் கூடாது.” (இதுதான் அந்த நீதமான சமமான விஷயம்.) ஆக, அவர்கள் (இதை ஏற்காமல் புறக்கணித்து) விலகிச் சென்றால், “நிச்சயமாக நாங்கள் முஸ்லிம்கள் என்பதற்கு நீங்கள் சாட்சி சொல்லுங்கள்!” என்று நீங்கள் (அவர்களிடம்) கூறிவிடுங்கள். (அல்குர்ஆன் 3 : 64)

மத நல்லிணக்கத்தை பாதுகாப்பதற்கு மதரீதியான கலந்துரையாடல்கள் மிக அவசியம். அதேவேளை குடிமக்கள் ஒவ்வொருவரும் அவரவர் நம்பிக்கையின் பிரகாரம் வாழ்வதை எவரும் தடுக்க கூடாது. அதற்கான சுதந்திரத்தை வழங்கிட வேண்டும். அச்சுதந்திரத்தை நபி முஹம்மத் ﷺ அவர்கள் பூரணமாக வழங்கினார்கள்.

யூதர்கள் வேதம் கொடுக்கப்பட்டவர்கள் என்ற அடிப்படையில் அவர்களுக்கு இஸ்லாமை எடுத்துக் கூறுவது கடமையாகும்; ஆனால், அவர்கள் மீது இஸ்லாமை திணிப்பது கூடாது என அல்லாஹ் நபி ﷺ அவர்களுக்கு விளக்கினான்.[50]

50. பார்க்க அல்குர்ஆன் 2:256.

# கிறிஸ்தவர்களுடன்
# முஹம்மத் நபி ﷺ அவர்களின் நல்லுறவு

யூதர்களுடன் சமூக, பொருளாதார தொடர்புகளை நபி ﷺ அவர்கள் பேணியது போல் கிறிஸ்தவர்களுடன் தொடர்புகளை பேணுவதற்கான வாய்ப்புகள் முஹம்மத் ﷺ அவர்களுக்கு இருக்கவில்லை. காரணம், கிறிஸ்தவர்கள் முஹம்மத் ﷺ அவர்கள் வாழ்ந்த பகுதியிலோ அல்லது அதற்கு சமீபமான நிலப்பகுதியிலோ இருக்கவில்லை. பல நூறு மைல்களுக்கு அப்பால்தான் கிறிஸ்தவர்கள் இருந்தார்கள். ஆனாலும், கிறிஸ்தவர்களுடன் முக்கிய இரண்டு நிகழ்வுகள் நபி ﷺ அவர்களின் வாழ்வில் நடந்தேறியுள்ளன.

## முதலாவது நிகழ்வு

முஹம்மத் ﷺ அவர்களுக்கு முதன் முதலில் இறைச்செய்தி வந்தபோது அச்செய்தியை உண்மைப்படுத்தி உறுதிப்படுத்தியவர் வரகா இப்னு நவ்ஃபல் என்பவராவார்.

வரகா இப்னு நவ்ஃபல் கிறிஸ்தவராக இருந்தார், ஹிப்ரு மொழியை அறிந்திருந்தார், இன்ஜீல் வேதத்தைக் கற்றுத் தேர்ந்திருந்தார். அவர் வயது முதிர்ந்தவராகவும், கண்பார்வையிழந்தவராகவும் இருந்தார்.

வரகா இப்னு நவ்ஃபல் நபி ﷺ அவர்களிடம் பேசும்போது உம்மிடம் இறைச்செய்தியை கொண்டு வந்தவர் மூஸாவிடம் அல்லாஹ் அனுப்பிய நாமூஸ் (எனும் வானவர் ஜிப்ரீல்) ஆவார். (இப்போது நீர் இறைத்தூதராக தேர்வு செய்யப்பட்டுள்ளீர்) எனக் கூறிவிட்டு உமது சமூகத்தார் உம்மை உமது ஊரிலிருந்து வெளியேற்றும் சமயத்தில் நான் உயிருடன் திடகாத்திரமான இளைஞனாக இருக்க வேண்டுமே என்று தனது ஆர்வத்தை தெரிவித்தார். அப்போது முஹம்மத் ﷺ அவர்கள், மக்கள்

என்னை வெளியேற்றுவார்களா? என்று கேட்டார்கள். அதற்கவர் ஆம்! நீர் கொண்டு வந்திருப்பது போன்ற சத்தியத்தைக் கொண்டு வந்த எந்த மனிதரும் (மக்களால்) பகைத்துக் கொள்ளப்படாமல் இருந்ததில்லை. (நீர் வெளியேற்றப்படும் அந்நாளில்) நான் உயிருடன் இருந்தால் உமக்கு பலமான உதவி செய்வேன் என்று கூறினார். இந்நிகழ்ச்சிக்குப் பின் குறுகிய காலத்தில் வரகா இறந்து விட்டார்.[51]

## இரண்டாவது நிகழ்வு

மக்காவில் இஸ்லாம் வளர்ந்து வரும்போது எதிரிகள் கடுமையாக எதிர்த்தார்கள்; மூர்க்கத்தனமாக நடந்து கொண்டார்கள். நாளுக்கு நாள் அச்சுறுத்தல்கள் அதிகரித்தபோது முஸ்லிம்களின் உயிர்களையும் மார்க்கத்தையும் பாதுகாப்பதற்காக ஹபஷா - எத்தியோப்பியாவுக்கு புறப்படும்படி முஹம்மத் ﷺ அவர்கள் உத்தரவிட்டார்கள். எத்தியோப்பியாவின் கிறிஸ்தவ மன்னர் அஸ்ஹமா நஜ்ஜாஷி அவர்கள் நீதமானவர் என்பதை முஹம்மத் ﷺ அவர்கள் அறிந்திருந்தார்கள். அந்நாட்டு மன்னனின் நல்லுறவையும், நல்லாதரவையும் நபி ﷺ அவர்கள் நாடினார்கள்.

எத்தியோப்பியாவுக்குச் சென்ற முஸ்லிம்களை அங்கிருந்து நாடு கடத்த வேண்டும்; மக்காவுக்கு திருப்பி அனுப்ப வேண்டும் என மக்காவின் நிராகரிப்பாளர்கள் மூலம் அனுப்பப்பட்ட தூதுவர்கள் மன்னரை சந்தித்துப் பேசினர். மேலும், முஸ்லிம்கள் பற்றி இல்லாத பொல்லாத செய்திகளை மன்னரிடம் கூறினர்.

பிரச்சனையை தீர விசாரிக்க முடிவு செய்த மன்னர், முஸ்லிம்களை சபைக்கு வரவழைத்தார். அரச சபையில் முஸ்லிம்கள் விசாரணைக்காக (கைதிகளைப் போல்) நின்றிருந்தனர். உங்களது இனத்தை விட்டுப் பிரிந்து எனது மார்க்கத்தையும் மற்றவர்களின்

51. அறிவிப்பாளர்: ஆயிஷா ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 3, 3392.

மார்க்கத்தையும் ஏற்றுக் கொள்ளாமல் புதுமையான மார்க்கத்தை ஏற்றிருக்கிறீர்களே, அது என்ன மார்க்கம்? என்று மன்னர் நஜ்ஜாஷி கேட்டார். முஸ்லிம்களின் பேச்சாளராக இருந்த ஜஅஃபர் இப்னு அபீதாலிப் ﵁ பதில் கூறினார்கள்:

அரசே! நாங்கள் அறியாமைக் காலத்தில் இருந்தோம். சிலைகளை வணங்கினோம். இறந்த பிராணிகளைச் சாப்பிட்டோம். மானக்கேடான காரியங்களைச் செய்தோம். உறவுகளைத் துண்டித்து, அண்டை வீட்டாருக்கு கெடுதிகள் விளைவித்து வந்தோம். எங்களிலுள்ள எளியோரை வலியோர் விழுங்கி வந்தனர்.

இப்படியே நாங்கள் வாழ்ந்து வரும்போதுதான் எங்களில் உள்ள ஒருவரையே அல்லாஹ் எங்களுக்குத் தூதராக அனுப்பினான். அவருடைய வம்சத்தையும், அவர் உண்மையாளர், நம்பகத் தன்மை மிக்கவர், மிக ஒழுக்கசீலர் என்பதையும் நாங்கள் நன்கு அறிவோம். “நாங்கள் அல்லாஹ் ஒருவனையே வணங்க வேண்டும்; நாங்களும் எங்களது மூதாதையர்களும் வணங்கி வந்த கற்சிலைகள், புனிதஸ்தலங்கள் போன்றவற்றிலிருந்து நாங்கள் விலக வேண்டும்; உண்மையே உரைக்க வேண்டும்; அமானிதத்தை நிறைவேற்ற வேண்டும்; உறவினர்களோடு சேர்ந்து வாழவேண்டும்; அண்டை வீட்டாருடன் அழகிய முறையில் நடந்துக் கொள்ள வேண்டும்; அல்லாஹ் தடைசெய்தவற்றையும் கொலைக் குற்றங்களையும் விட்டு விலகி விடவேண்டும்” என அத்தூதர் எங்களுக்குக் கட்டளையிட்டார்.

மேலும், மானக்கேடானவைகள், பொய்பேசுதல், அநாதையின் சொத்தை அபகரித்தல், பத்தினியான பெண்கள் மீது அவதூறு கூறல் போன்றவற்றிலிருந்து எங்களைத் தடுத்தார். “அல்லாஹ் ஒருவனையே வணங்க வேண்டும்; அவனுக்கு இணைவைக்கக் கூடாது; தொழ வேண்டும்; மார்க்க வரி (ஸகாத்து) கொடுக்க வேண்டும்; நோன்பு நோற்க வேண்டும்” என்றும் அத்தூதர் எங்களுக்குக் கட்டளையிட்டார்.

நாங்கள் அவரை உண்மையாளராக நம்பினோம். அவரை விசுவாசித்தோம். அவர் எங்களுக்கு அறிமுகப்படுத்திய அல்லாஹ்வின் மார்க்கத்தை பின்பற்றினோம். அல்லாஹ் ஒருவனையே வணங்க ஆரம்பித்தோம். அவனுக்கு இணைவைப்பதை விட்டுவிட்டோம். அவன் எங்களுக்கு விலக்கியதிலிருந்து விலகிக் கொண்டோம். அவர் எங்களுக்கு ஆகுமாக்கியதை அப்படியே ஏற்றுக் கொண்டோம். இதனால் எங்களது இனத்தவர் எங்கள் மீது அத்துமீறினர். எங்களை வேதனை செய்தனர். "அல்லாஹ்வை வணங்குவதை விட்டுவிட்டு சிலைகளை வணங்க வேண்டும்; முன்பு போலவே கெட்டவைகளைச் செய்ய வேண்டும்" என்று நிர்ப்பந்தித்து எங்களை எங்களது மார்க்கத்திலிருந்து திருப்ப முயற்சித்தனர். எங்களை அடக்கி, அநியாயம் செய்து, நெருக்கடியை உண்டாக்கி, எங்களது மார்க்கத்தைப் பின்பற்றுவதற்கும் மார்க்க சுதந்திரத்துக்கும் அவர்கள் தடையானபோது உங்களது நாட்டுக்கு நாங்கள் வந்தோம். உங்களை நாங்கள் தேர்ந்தெடுத்தோம். உங்களிடம் தங்குவதற்கு விருப்பப்பட்டோம். அரசே! எங்களுக்கு இங்கு அநீதி இழைக்கப்பட மாட்டாது என்று நம்புகிறோம் என ஜஅஃபர் ؓ கூறி முடித்தார்.

அல்லாஹ்வின் புறத்திலிருந்து முஹம்மத் ﷺ அவர்கள் கொண்டு வந்த ஏதாவது உம்மிடம் இருக்கிறதா? என்று மன்னர் வினவினார். அதற்கு ஜஅஃபர் ؓ ஆம்! இருக்கிறது என்றார். எங்கே எனக்கு அதை காட்டு என்றார் மன்னர்.

அல்குர்ஆனின் மர்யம் என்ற பத்தொன்பதாவது அத்தியாயத்தின் முற்பகுதியை ஜஅஃபர் ؓ அவர்கள் ஓதிக் காண்பித்தார். (அந்த அத்தியாயம் ஈஸா நபி, அவரது தாயார், இன்னும் அவரது போதனைகள் பற்றிய செய்திகளை உள்ளடக்கியதாகும்.)

(இதனை செவிமடுத்த மன்னர்) அல்லாஹ்வின் மீது ஆணையாக! தாடி நனையும் அளவு அழுதார். சபையில் உள்ளவர்களும்

ஜஅஃபர் ﵁ ஓதியதைக் கேட்டு தங்களின் கையிலுள்ள ஏடுகள் நனையுமளவு அழுதனர். பிறகு, மன்னர் நஜ்ஜாஷி இதுவும் நபி ஈஸா -இயேசு கொண்டு வந்த மார்க்கமும் ஒரே மாடத்திலிருந்து வெளியானது எனக் கூறிவிட்டு மக்கா நகர தூதுவர்களைப் பார்த்து, "நீங்கள் திரும்பி செல்லுங்கள்!. உங்களிடம் நான் இவர்களை ஒப்படைக்க மாட்டேன்" என்றார்.

வெளியில் வந்த அந்தத் தூதுவர்களில் ஒருவரான அம்ரு என்பவர் தன்னுடன் வந்த அப்துல்லாஹ் இப்னு அபீ ரபீஆவிடம் பேசும்போது, "அல்லாஹ்வின் மீது ஆணையாக! இவர்களை அடியோடு வேரறுப்பதற்குண்டான வேலையை நான் நாளை செய்வேன்" என்று கூறினார்.

மறுநாள் அம்ரு, மன்னர் நஜ்ஜாஷியிடம் வந்து "அரசே! இவர்கள், இயேசுவின் விஷயத்தில் அபாண்டமான வார்த்தையை கூறுகிறார்கள்" என்று கூறினார். "அப்படியா! அவர்களை என்னிடம் அழைத்து வாருங்கள்" என்றார் மன்னர். முஸ்லிம்களிடம் அது பற்றி விசாரணை செய்தார்.

"எங்களது நபி ﷺ அவர்கள் எங்களுக்குக் கூறியதைத்தான் நாங்கள் இயேசு விஷயத்தில் கூறுகிறோம். அவர் அல்லாஹ்வின் அடிமை; அவனது தூதர்; அவனால் உயிர் ஊதப்பட்டவர்; கண்ணியமிக்க கன்னிப்பெண் மர்யமுக்கு அல்லாஹ்வின் சொல்லால் பிறந்தவர்" என்று ஜஅஃபர் ﵁ கூறினார்.

மன்னர் நஜ்ஜாஷி கீழேயிருந்து ஒரு குச்சியை எடுத்து, "அல்லாஹ்வின் மீது ஆணையாக! மர்யமின் மகன் ஈஸா ﵇ இக்குச்சியின் அளவுகூட நீ கூறியதை விட அதிகமாக கூறியதில்லை" என்றார். இதைக் கேட்ட அவரது மத குருமார்கள் முகம் சுழித்தனர். "அல்லாஹ்வின் மீது ஆணையாக! நீங்கள் முகம் சுழித்தாலும் இதுவே உண்மை" என்று மன்னர் நஜ்ஜாஷி கூறிவிட்டார்.

பிறகு, மன்னர் முஸ்லிம்களை நோக்கி, "நீங்கள் செல்லலாம்! எனது பூமியில் நீங்கள் முழு பாதுகாப்புப் பெற்றவர்கள். உங்களை ஏசியவர் தண்டனைக்குரியவர். தங்கத்தின் மலையை எனக்கு கொடுத்தாலும் உங்களைத் துன்புறுத்த நான் விரும்ப மாட்டேன்" என்று கூறினார்.

தனது சபையில் உள்ளவர்களிடம் மக்கா தூதுவர்கள் கொண்டு வந்த அன்பளிப்புகளை அவர்களிடமே திரும்ப கொடுத்து விடுங்கள். எனக்கு அதில் எவ்வித தேவையும் இல்லை. அல்லாஹ்வின் மீது ஆணையாக! இதற்கு முன்பு பறிபோன எனது ஆட்சியை அல்லாஹ் எனக்கு மீட்டுத் தந்தபோது என்னிடமிருந்து அவன் லஞ்சம் வாங்கவில்லை. எனவே, நான் அவன் விஷயத்தில் லஞ்சம் வாங்குவேனா? எனக்கு எதிராக அல்லாஹ் கிளர்ச்சியாளர்களுக்கு உதவாதபோது அவனுக்கு எதிராக நான் இவர்களுக்கு உதவுவேனா? என்று கூறினார்.[52]

முஸ்லிம்கள் மூலமாக நஜ்ஜாஷி மன்னர் இஸ்லாமிய கொள்கைகளை அறிந்துக் கொண்டார். குறிப்பாக கிறிஸ்தவர்கள் நம்புகிற இயேசு பற்றியும் அவரது அன்னை மர்யம் என்கிற மேரி பற்றியும் முஸ்லிம்கள் கொண்டுள்ள நம்பிக்கைகளையும் தெரிந்து கொண்டார்.

பிற்காலத்தில் மன்னர் நஜ்ஜாஷி இஸ்லாமை ஏற்றவராக மரணித்து விட்டார் என்ற செய்தி அறிந்த முஹம்மத் ﷺ அவர்கள், அந்த மன்னருக்கு பிரார்த்தனை செய்து ஜனாஸா தொழுகையை[53] மதீனாவில் நடத்தினார்கள்.[54]

ஆதம் முதல் இயேசு வரை அனைத்து இறைத்தூதர்களைப் பற்றியும் அவர்கள் போதித்த போதனைகள் பற்றியும் குர்ஆன்

52. நூல்: சீரா இப்னு ஹிஷாம், அர்ரஹீகுல் மக்தூம்.

53. இறந்தவருக்காக அவரது பிரேதத்தை முன்னால் வைத்து நடத்தப்படும் ஒருவித பிரார்த்தனையை ஜனாஸா தொழுகை என்று கூறப்படும்.

54. அறிவிப்பாளர்: அபூஹுரைரா ﷺ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 1327, 1328.

குறிப்பிடுகிறது. அந்த இறைத்தூதர்களின் பெயர்களை குறிப்பிடும்போது, ''அவர்கள் மீது அல்லாஹ்வின் சாந்தி உண்டாகட்டுமாக!'' என முஸ்லிம்கள் பிரார்த்திப்பார்கள். இயேசுவையும் மேரியையும் இதே மரியாதையுடன்தான் முஸ்லிம்கள் அழைப்பார்கள். எந்தவொரு இறைத்தூதரையும் முஸ்லிம்கள் வேறுபடுத்தி பார்ப்பதில்லை.

அவ்வாறே, முஹம்மத் நபி ﷺ அவர்கள் பற்றிய முன்னறிவிப்பை இயேசு தனது சமூகத்தாருக்கு முன்வைத்தார் என்று அல்குர்ஆன் குறிப்பிடுகிறது. மேலும், இறைத்தூதர்களின் வரிசையில் முஹம்மத் நபி ﷺ அவர்கள் இறுதியானவர் என குறிப்பிடுகிறது.

இயேசுவின் சிறப்பைப் பற்றி நபி ﷺ அவர்கள் சொல்லும்போது, நான் மர்யமின் மகன் ஈஸாவுக்கு மிக நெருக்கமானவன். நபிமார்களின் அன்னையர் பலராய் இருந்தாலும் அவர்கள் அனைவரும் தந்தைவழிச் சகோதரர்கள் ஆவார்கள். அவர்கள் அனைவருடைய மார்க்கமும் ஒன்றே. எனக்கும் ஈஸாவுக்குமிடையில் எந்த இறைத்தூதரும் இல்லை என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[55]

அல்குர்ஆனில் மேரியின் பெயரில் "மர்யம் எனும் அத்தியாயமும் அவர்களுடைய குடும்பத்தின் பெயரில் ஆலு இம்ரான் எனும் தனி அத்தியாயமும் உண்டு." அன்னை மர்யம் عليها السلام அவர்கள் உடைய பிறப்பு வளர்ப்பு பற்றியும் இயேசுவின் பிறப்பு வளர்ப்பு பற்றியும் அல்குர்ஆன் மிக கண்ணியமாக பேசுகிறது.

கொள்கை கோட்பாடு ரீதியாக கிறிஸ்தவர்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையில் வேறுபாடுகள் இருந்தாலும் அவர்களை மதித்து உறவாட வழிகாட்டுகிறது. ஏக இறைக்கொள்கையை முன்வைத்து அவர்களுக்கு அழைப்பு விடுக்கிறது.

55. அறிவிப்பாளர்: அபூஹுரைரா رضي الله عنه, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் எண்: 2365.

(நபியே!) கூறுவீராக: "வேதக்காரர்களே! எங்கள் மத்தியிலும் உங்கள் மத்தியிலும் (நீதமான) சமமான ஒரு விஷயத்தின் பக்கம் வாருங்கள்! அதாவது: அல்லாஹ்வைத் தவிர (எவரையும் நீங்களும் நாமும்) வணங்கமாட்டோம்; அவனுக்கு எதையும் (நீங்களும் நாமும்) இணையாக்க மாட்டோம்; அல்லாஹ்வைத் தவிர நம்மில் சிலர் சிலரை வணங்கப்படும் தெய்வங்களாக எடுத்துக் கொள்ளக் கூடாது." (இதுதான் அந்த நீதமான சமமான விஷயம்.) ஆக, அவர்கள் (இதை ஏற்காமல் புறக்கணித்து) விலகி சென்றால், "நிச்சயமாக நாங்கள் முஸ்லிம்கள் என்பதற்கு நீங்கள் சாட்சி சொல்லுங்கள்!" என்று நீங்கள் (அவர்களிடம்) கூறிவிடுங்கள். (அல்குர்ஆன் 3 : 64)

இந்த அழைப்பை இறைத்தூதர்களின் அழைப்பாகவே நபி முஹம்மத் ﷺ அவர்கள் முன்வைத்தார்கள். மத நல்லிணக்கத்திற்கு அடிப்படையான விஷயத்தில் ஒன்றுபடுவதற்கான தூதாகவும் இதை முன்வைத்தார்கள்.

மேற்கூறப்பட்ட இரண்டு முக்கிய நிகழ்வுகளோடு இன்னும் சில நிகழ்வுகளையும் இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். அதாவது, நஜ்ரான் எனும் பகுதியிலிருந்து அறுபது பேர் கொண்ட கிறிஸ்தவ குழுவொன்று நபி ﷺ அவர்களை சந்திக்க மதீனா வந்தபோது அவர்களை நபியவர்கள் கண்ணியமாக வரவேற்று உபசரித்து அவர்களுடன் உரையாடினார்கள். அக்குழுவில் பாதிரிமார்களும் தலைமைப் பொறுப்பு வகிக்கும் முக்கியப் பிரமுகர்கள் பதினான்கு பேரும் இருந்தனர். இக்குழுவினர் இயேசு பற்றியும் அன்னை மேரி பற்றியும் கலந்துரையாடினர்.

இறுதியில் அபுல் காசிம் (முஹம்மத்) அவர்களே! உம்முடைய தோழர்களில் நம்பிக்கையான ஒருவரை எங்களுடன் அனுப்பி வையுங்கள். அவர் எங்களுக்கு இஸ்லாமையும் உமது வழிமுறையையும் கற்றுத்தரட்டும் என்றார்கள். அப்போது

நபியவர்கள், "இவர் இந்த சமூகத்தில் நம்பிக்கையாளர்" எனக் கூறி அபூ உபைதா அல்ஜர்ராஹ் என்ற தோழரை அனுப்பி வைத்தார்கள்.[56]

முஹம்மத் ﷺ அவர்களுக்குப் பின் முஸ்லிம்களின் முதல் ஆட்சியாளராக வந்த கலீஃபா அபூ பக்ர் ؓ நஜ்ரான் நாட்டு மக்களுக்கு அனுப்பி வைத்த கடிதத்தில் அவர்கள் எழுதியதாவது: நஜ்ரான் வாசிகளே! உங்கள் உயிர், உங்கள் மண், உங்கள் மார்க்கம், உங்கள் செல்வம், உங்கள் கால்நடைகள், உங்கள் வழிபாடுகள், உங்களில் சமூகமளித்திருப்பவரும், இல்லாதவரும், உங்கள் மதகுருமார்கள், உங்கள் மடங்கள் ஆகிய இவை அனைத்துக்கும் அல்லாஹ்வும் அவனது தூதர் முஹம்மத் ﷺ அவர்களும் வழங்கிய பாதுகாப்பு உங்களுக்கு உண்டு. மேலும், உங்களுக்குரிய சிறிய, பெரிய சொத்துக்களும் பாதுகாக்கப்படும். இவை நஷ்டப்படுத்தவோ சேதப்படுத்தவோ படமாட்டாது. எந்த பிஷப்பும் பிஷப் அந்தஸ்திலிருந்தும் எந்தத் துறவியும் துறவி நிலையிலிருந்தும் அகற்றப்பட மாட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் ﷺ அவர்கள் உங்களுக்கு எழுதித் தந்த வாக்குறுதி முழுமையாக காப்பாற்றப்படும். இந்த கடிதத்தின் வாயிலாக அல்லாஹ்வுடைய பாதுகாப்பும் முஹம்மத் ﷺ அவர்களின் பொறுப்பும் எப்போதும் உங்களுக்கு உண்டு என்று உறுதிப்படுத்துகிறோம்.[57]

முஹம்மத் ﷺ அவர்கள் கடைப்பிடித்த நல்லிணக்கத்தை முன்மாதிரியாகக் கொண்டு முஸ்லிம்களின் முதல் கலீஃபா அபூ பக்ர் ؓ அவர்கள் கிறிஸ்தவ மக்களுடன் நட்புணர்வோடு நடந்துக் கொண்டார்கள்.

கிறிஸ்தவ மக்கள் முஸ்லிம்களுக்கு நெருக்கமாக இருக்கிறார்கள் என்பதை குர்ஆன் புகழ்ந்து பேசுகிறது.

56. நூல்: தப்ஸீர் இப்னு கஸீர் - நீண்ட செய்தியின் சுருக்கம். ஸஹீஹுல் புகாரி எண்: 4380, ஸஹீஹ் முஸ்லிம் எண்: 2419.
57. நூல்: அல்கராஜ் லி அபீ யூசுஃப்.

(நபியே!) மக்களில் யூதர்களையும், இணைவைப்பவர்களையும் நம்பிக்கையாளர்களுக்கு கடுமையான பகைவர்களாக காண்பீர்! இன்னும், நாங்கள் கிறித்தவர்கள் என்று கூறுபவர்கள் நம்பிக்கையாளர்களுக்கு அவர்களில் பாசத்தால் மிக நெருங்கியவர்களாக இருப்பதை நிச்சயமாக நீர் காண்பீர்! அதற்குக் காரணமாவது, நிச்சயமாக அவர்களில் குருக்களும், துறவிகளும் இருப்பதும், நிச்சயமாக அவர்கள் அகம்பாவம் கொள்ள மாட்டார்கள் என்பதுமாகும்.

இன்னும், இந்த தூதருக்கு இறக்கப்பட்டதை அ(ந்த கிறித்த) வர்கள் செவியுற்றால், உண்மையை அவர்கள் அறிந்த காரணத்தினால் அவர்களின் கண்களை அவை கண்ணீரால் நிரம்பி வழியக்கூடியதாக நீர் காண்பீர். "எங்கள் இறைவா! (இத்தூதரையும் இவ்வேதத்தையும்) நாங்கள் நம்பிக்கை கொண்டோம். ஆகவே, சாட்சியாளர்களுடன் (-முஸ்லிமான இந்த சமுதாயத்துடன்) எங்களை(யும்) பதிவு செய்!" என்று அவர்கள் கூறுகிறார்கள்.

இன்னும், "அல்லாஹ்வையும் (அவனிடமிருந்து) நமக்கு வந்த சத்தியத்தையும் நாங்கள் நம்பிக்கைகொள்ளாதிருக்கவும், எங்கள் இறைவன் நல்ல மக்களுடன் எங்களை சேர்த்து வைப்பதை நாங்கள் ஆசைப்படாமல் இருப்பதற்கும் எங்களுக்கு என்ன நேர்ந்தது?" (என்று கூறுகிறார்கள்).

ஆகவே, அவர்கள் (இவ்வாறு) கூறியதன் காரணமாக, சொர்க்கங்களை அல்லாஹ் அவர்களுக்கு கூலியாக வழங்கினான். அவற்றின் கீழ் நதிகள் ஓடும். அவற்றில் (அவர்கள்) நிரந்தரமாக தங்கி இருப்பார்கள். இன்னும், இதுதான் (சத்தியத்தை ஏற்று) நல்லறம் புரிபவர்களுடைய கூலியாகும். (அல்குர்ஆன் 5 : 82-85)

கிறிஸ்தவர்களிடமுள்ள நல்ல பண்புகளை நபி ﷺ அவர்கள்

பாராட்டாமல் இருந்ததில்லை. கிறிஸ்தவ சமுதாயத்திலுள்ள நல்ல குணங்களை நபித்தோழர் இப்னு மஸ்ஊத் ﵁ பின்வருமாறு அறிவிக்கிறார்.

கிறிஸ்தவர்கள், சோதனையின்போது மக்களிலேயே மிகவும் நிதானத்தைக் கடைப்பிடிப்பவர்கள்; சோதனைக்குப் பின்னர் மிக விரைவாக விழித்துக் கொள்பவர்கள்; (களத்திலிருந்து) வெருண்டோடிய பின்னர் மிக விரைவாகத் திரும்பி வருபவர்கள்; ஏழைகள், அநாதைகள், நலிந்தோர் ஆகியோருக்கு நல்லுதவிகள் புரிபவர்கள் ஆவார்கள். அவர்களிடம் அழகிய குணம் ஒன்று உண்டு. ஆட்சியாளர்களின் அநீதியிலிருந்து (மக்களைக்) காப்பவர்கள் என நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[58]

முஸ்லிம்கள் கிறிஸ்தவர்கள் மீது கொண்டிருக்கும் நேசத்தையும் நலனையும் சுட்டிக்காட்டக்கூடிய ஒரு செய்தியை குர்ஆன் எடுத்துச் சொன்னது.

இஸ்லாமை எல்லா மக்களிடமும் எடுத்துவைக்கும் பணியில் நபி ﷺ அவர்கள் இறங்கியபோது வெளிநாட்டு அரசர்களுக்கும் குறுநில மன்னர்களுக்கும் கடிதங்கள் மூலம் இஸ்லாமை எடுத்து வைத்தார்கள். ரோமப் பைசாந்திய கிறிஸ்தவ மன்னர் ஹெர்குலிஸுக்கு கடிதம் மூலம் தெரிவித்தார்கள். இக்கடிதம், பைத்துல்முகத்தஸில் மன்னர் முகாமிட்டிருந்த நேரம் வந்தடைந்தது.

அவ்வேளையில் மக்காவின் தலைவர்கள் வியாபாரம் நிமித்தமாக ஷாம்[59] தேசத்திற்கு வருகை தந்திருந்தனர்.

இக்கடிதத்தை பெற்றுக் கொண்ட மன்னர் தம்மை இறைத்தூதர் எனக் கூறும் அந்த மனிதரின் குலத்தார் யாரேனும் இங்கு (நம்

58. அறிவிப்பாளர்: அல்முஸ்தவ்ரித் இப்னு ஷத்தாத் ﵁, நூல்: ஸஹீஹ் முஸ்லிம் எண்: 2898.

59. ஷாம் என்பது இன்றைய சிரிய இன்னும் பாலஸ்த்தீனத்தை உள்ளடக்கிய நிலப்பரப்பின் வரலாற்று பெயராகும்.

நாட்டில்) உள்ளனரா என்று கேட்டார். சபையில் இருந்தவர்கள் ஆம் எனக் கூறினார்கள்.

அவரை அழைத்து வாருங்கள் என மன்னர் உத்தரவிட, மக்காவிலிருந்து வந்த வணிகக் குழுவினருடன் மக்காவின் தலைவர் அபூ சுஃப்யான் மன்னருக்கு முன்னால் வரவழைக்கப்பட்டார்.

அப்போது மன்னர் தம்மை இறைத்தூதர் என சொல்லிக் கொண்டிருக்கும் இந்த (முஹம்மத் எனும்) மனிதருக்கு உங்களில் நெருங்கிய உறவினர் யார்? என கேட்டார்.

மக்காவின் தலைவர் அபூ சுஃப்யான் "நானே அவரின் உறவினராவேன்" எனக் கூறினார். அவரை மன்னருக்கு அருகில் உட்காரவைத்து விட்டு அவருடன் வந்தவர்களை அவருக்குப் பின்னால் உட்காரவைத்தார். பிறகு மன்னர் தம்மை இறைத்தூதர் என சொல்லிக் கொண்டிருக்கும் இந்த மனிதரைப் பற்றி நான் இவரிடம் கேட்பேன். இவர் பொய் ஏதும் சொன்னால் உடனே அவர் பொய் சொல்கிறார் என நீங்கள் கூறி விடவேண்டும் என மன்னர் கட்டளையிட்டார்.

நான் பொய் சொல்கிறேன் என என்னைப் பற்றி என் நண்பர்கள் பேசுவார்களோ என்ற அச்சம் இல்லையேல் அல்லாஹ்வின் மீது ஆணையாக! நான் முஹம்மத் அவர்களைப் பற்றி பொய்யான தகவல்களைச் சொல்லியிருப்பேன் என மக்காவின் தலைவர் அபூ சுஃப்யான் (பிற்காலத்தில்) கூறினார். பிறகு, மன்னர் பின்வருமாறு கேள்விகளை கேட்க, அபூ சுஃப்யான் பதில் சொல்லத் தொடங்கினார்.

மன்னர்: முஹம்மத் நபியின் குலம் எத்தகையது?

அபூ சுஃப்யான்: சிறந்த குலத்தைச் சார்ந்தவர்.

மன்னர்: இவருக்கு முன்னர் உங்களில் யாரேனும் எப்போதாவது

(இறைத் தூதுத்துவம் என்ற) இந்த வாதத்தை செய்ததுண்டா?

அபூ சுஃப்யான்: இல்லை.

மன்னர்: இவரின் முன்னோர்களில் எவரேனும் மன்னராக இருந்ததுண்டா?

அபூ சுஃப்யான்: இல்லை.

மன்னர்: அவரைப் பின்பற்றுபவர்கள் மக்களில் வசதி படைத்தவர்களா? அல்லது சாமானியர்களா?

அபூ சுஃப்யான்: சாமானியர்கள்.

மன்னர்: அவரைப் பின்பற்றுபவர்கள் அதிகரிக்கின்றார்களா? அல்லது குறைகின்றனரா?

அபூ சுஃப்யான்: அதிகரிக்கின்றனர்.

மன்னர்: அவரது மார்க்கத்தில் நுழைந்த பின் அதிருப்தியுற்று எவரேனும் மதம் மாறியிருக்கிறார்களா?

அபூ சுஃப்யான்: இல்லை.

மன்னர்: அவர் இவ்வாறு வாதிப்பதற்கு முன் அவர் பொய்சொல்லக் கூடியவர் என்று எப்போதாவது நீங்கள் சந்தேகித்ததுண்டா?

அபூ சுஃப்யான்: இல்லை.

மன்னர்: அவர் வாக்கு மீறியதுண்டா?

அபூ சுஃப்யான்: இல்லை. ஆனால் நாங்கள் இப்போது அவருடன் (ஹுதைபிய்யா எனும் இடத்தில்) ஒரு உடன்படிக்கை செய்துள்ளோம். அதில் எப்படி நடந்துக் கொள்ளப்போகிறார் என்று எங்களுக்குத் தெரியாது.

மன்னர்: அவருடன் நீங்கள் போர் புரிந்ததுண்டா?

அபூ சுஃப்யான்: ஆம்.

மன்னர்: போரின் முடிவுகள் எப்படி இருந்தன?

அபூ சுஃப்யான்: வெற்றியும் தோல்வியும் மாறிமாறி வந்திருக்கின்றன.

மன்னர்: அவர் உங்களுக்கு என்னதான் போதிக்கிறார்?

அபூ சுஃப்யான்: அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். அவனுக்கு எதனையும் இணையாக்காதீர்கள். உங்கள் முன்னோர்கள் கூறிவந்ததையெல்லாம் விட்டுவிடுங்கள். தொழுகை, உண்மை, கற்பு நெறி, உறவினர்களுடன் இணங்கி இருத்தல் போன்ற பண்புகளை ஏவுகிறார்.

இந்த உரையாடலுக்குப் பின் மன்னர் பேசும்போது,

அவரின் குலத்தைப் பற்றி உம்மிடம் விசாரித்தேன். அதற்கு நீர் உங்களில் அவர் சிறந்த குலத்தைச் சேர்ந்தவர் என்று குறிப்பிட்டீர். எல்லா இறைத்தூதர்களும் அப்படித்தான். அவர்களின் சமூகத்திலுள்ள சிறந்த குலத்தில்தான் அனுப்பப்பட்டுள்ளார்கள்.

உங்களில் யாரேனும் இந்த வாதத்தை இதற்கு முன் செய்ததுண்டா? என்று கேட்டேன். அதற்கு நீர் இல்லை என்று குறிப்பிட்டீர். இவருக்கு முன்னர் யாரேனும் இவ்வாதத்தைச் செய்திருந்தால், முன்னர் செய்யப்பட்டு வந்த வாதத்தைப் பின்பற்றித்தான் இவரும் செய்கிறார் என்று கூறியிருப்பேன்.

இவரின் முன்னோர்களில் யாரேனும் மன்னராக இருந்திருக்கிறார்களா என்று உம்மிடம் நான் கேட்டபோது, இல்லை என்று சொன்னீர். இவரின் முன்னோர்களில் எவரேனும் மன்னராக இருந்திருந்தால், தம் முன்னோரின் ஆட்சியை அடைய விரும்புகிற ஒருவர் இவர் என்று சொல்லியிருப்பேன்.

இவ்வாதத்தைச் செய்வதற்கு முன் அவர் பொய் சொல்வதாக

நீங்கள் அவரைச் சந்தேகித்ததுண்டா? என்று உம்மிடம் கேட்டேன். அதற்கு, இல்லை என்று குறிப்பிட்டீர். மக்களிடம் பொய் சொல்லத் துணியாத ஒருவர் இறைவன் மீது பொய்யுரைக்கத் துணியமாட்டார் என்றே உறுதியாக நம்புகிறேன்.

மக்களில் சிறப்பு வாய்ந்தவர்கள் அவரைப் பின்பற்றுகின்றனரா? அல்லது சாமானியர்களா? என்று கேட்டேன். சாமானிய மக்கள்தான் அவரைப் பின்பற்றுகின்றனர் என்று குறிப்பிட்டீர். அப்படிப்பட்டவர்கள்தான் இறைத்தூதர்களை (தொடக்கத்தில்) பின்பற்றுபவர்களாக இருந்திருக்கிறார்கள்.

அவரைப் பின்பற்றுகிறவர்கள் அதிகரிக்கின்றனரா? அல்லது, குறைகின்றனரா என்று உம்மிடம் கேட்டேன். அவர்கள் அதிகரிக்கின்றனர் என்று குறிப்பிட்டீர். இறை நம்பிக்கை நிறைவு பெறும்வரை அப்படித்தான் (வளர்ந்து கொண்டே) இருக்கும்.

அவரின் மார்க்கத்தில் நுழைந்த பின்னர் யாரேனும் அம்மார்க்கத்தின் மீது அதிருப்தியடைந்து மதம் மாறி இருக்கின்றனரா? என்று உம்மிடம் கேட்டேன். இல்லை என்று குறிப்பிட்டீர். அப்படித்தான் இதயத்தில் நுழைந்த இறை நம்பிக்கையின் எழில் (உறுதியாக இருக்கும்).

அவர் எப்போதேனும் வாக்கு மீறியதுண்டா? என உம்மிடம் நான் கேட்டபோது, இல்லை என்றீர். திருத்தூதர்கள் அப்படித்தான் வாக்கு மீற மாட்டார்கள்.

அவர் உங்களுக்கு எதைக் கட்டளையிடுகிறார்? என்று உம்மிடம் கேட்டேன். அல்லாஹ்வையே வணங்க வேண்டும் என்றும் அவனுக்கு எதனையும் இணையாக்கக் கூடாதென்றும் உங்களுக்கு அவர் ஏவுவதாகவும் சிலை வணக்கங்களிலிருந்து உங்களைத் தடுப்பதாகவும் தொழுகை, உண்மை, கற்புநெறி ஆகியவற்றை உங்களுக்கு ஏவுவதாகவும் நீர் கூறினீர்.

நீர் சொல்லியவை அனைத்தும் உண்மையானால் (ஒரு காலத்தில்) என்னுடைய இரண்டு பாதங்கள் உள்ள இந்த இடத்தையும் அவர் ஆளுவார். (இப்படிப்பட்ட) ஓர் இறைத்தூதர் (வெகு விரைவில்) தோன்றுவார் என்று முன்பே அறிந்திருந்தேன். ஆனால், அவர் (அரபிகளாகிய) உங்களிலிருந்து தான் தோன்றுவார் என்று நான் கருதியிருக்கவில்லை. அவரைச் சென்றடையும் வழியை நான் அறிந்திருந்தால் மிகுந்த சிரமப்பட்டாவது அவரைச் சந்தித்திருப்பேன். (இப்போது) நான் அவரருகே இருந்தால் அவரின் பாதங்களைக் கழுவிவிடுவேன் என மன்னர் கூறினார்.

பின்னர், முஹம்மத் ﷺ அவர்கள் அனுப்பிய கடிதத்தை மன்னர் கொண்டு வரச்செய்து (சபையில்) வாசிக்கச் சொன்னார்.

அளவற்ற அருளாளன் நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்வின் திருப்பெயரால்.

இது அல்லாஹ்வின் தூதர் முஹம்மதிடமிருந்து ரோமபுரியின் அதிபர் ஹெர்குலிஸுக்கு எழுதப்படும் கடிதம். நேர்வழியைப் பின்பற்றியவர் மீது சாந்தி நிலவட்டுமாக!

இறை வாழ்த்துக்குப் பின்!

இஸ்லாமின் அழைப்பை ஏற்குமாறு உங்களை நான் அழைக்கிறேன். இஸ்லாமை ஏற்றுக் கொள்ளுங்கள். (ஏற்றுக் கொண்டால்) ஈடேற்றம் பெறுவீர்கள். நீங்கள் இஸ்லாமை ஏற்றுக் கொண்டால் அல்லாஹ் உங்களுக்கு நற்பலனை இருமடங்காகத் தருவான். நீங்கள் புறக்கணித்தால் (உங்களை பின்பற்றி இஸ்லாமை ஏற்காமல் போகக்கூடிய எல்லா) குடிமக்களின் பாவமும் உங்களையே சாரும்.

(நபியே!) கூறுவீராக: "வேதக்காரர்களே! எங்கள் மத்தியிலும் உங்கள் மத்தியிலும் (நீதமான) சமமான ஒரு விஷயத்தின் பக்கம் வாருங்கள்! அதாவது: அல்லாஹ்வைத் தவிர (எவரையும்

நீங்களும் நாமும்) வணங்கமாட்டோம்; அவனுக்கு எதையும் (நீங்களும் நாமும்) இணையாக்க மாட்டோம்; அல்லாஹ்வைத் தவிர நம்மில் சிலர் சிலரை வணங்கப்படும் தெய்வங்களாக எடுத்துக் கொள்ளக் கூடாது." (இதுதான் அந்த நீதமான சமமான விஷயம்.) ஆக, அவர்கள் (இதை ஏற்காமல் புறக்கணித்து) விலகி சென்றால், "நிச்சயமாக நாங்கள் முஸ்லிம்கள் என்பதற்கு நீங்கள் சாட்சி சொல்லுங்கள்!" என்று நீங்கள் (அவர்களிடம்) கூறிவிடுங்கள். (அல்குர்ஆன் 3 : 64)

(இப்படிக்கு) - அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் ﷺ அவர்கள்

இக்கடிதத்தைப் படித்து முடித்தபோது மன்னருக்கு அருகிலிருந்தவர்களின் குரல்கள் உயர்ந்தன. கூச்சல்கள் அதிகரித்தன. அப்போது மன்னரின் உத்தரவின் பேரில் நாங்கள் சபையிலிருந்து வெளியேற்றப்பட்டோம்.

இதனைத் தொடர்ந்து அபூ சுஃப்யான் கூறும்போது: நாங்கள் வெளியே வந்தபோது எனது நண்பர்களிடம் முஹம்மதின் விவகாரம் வலிமை பெற்று விட்டது. மஞ்சள் நிற இனத்தவரான மன்னரே அவருக்கு அஞ்சுகிறாரே எனக் கூறினேன். அன்று முதல் அல்லாஹ்வின் மார்க்கம் விரைவில் வெற்றிபெறும் என உறுதிக் கொண்டேன். முடிவில் எனது உள்ளத்திலே அல்லாஹ் இஸ்லாமை புகுத்தினான்.[60]

மக்கா வெற்றி கொள்ளப்பட்ட போது அபூ சுஃப்யானும் அவரது குடும்பத்தினரும் இஸ்லாமை ஏற்றார்கள்.

இது சாதாரணமான இரு நபர்களுக்கிடையில் நடந்த சாமானிய உரையாடல் அல்ல. ஆட்சியும் அதிகாரமும் உடைய இரு நாட்டு தலைவர்களுக்கிடையில் நடந்த உரையாடலாகும். இங்கே முஹம்மத் நபி ﷺ அவர்கள் பற்றியும் அவரது கொள்கைகள்

60. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: ஸஹீஹுல் புகாரி எண்: 07.

பற்றியும் நன்கு அலசப்பட்டது. முஹம்மத் நபியின் உண்மைத் தன்மையை ஒளிவு மறைவின்றி மன்னர் ஹெர்குலிஸ் முன் அபூசுஃப்யான் எடுத்து வைத்தார். நபி ﷺ அவர்கள் மரணிப்பதற்கு ஐந்து வருடங்களுக்கு முன் இச்சந்திப்பு நடைப்பெற்றது என்பது குறிப்பிடத்தக்கது.

## சகிப்புத் தன்மையை இஸ்லாம் உயர்வாக மதிக்கிறது

இலங்கையின் முன்னாள் உச்சநீதிமன்ற நீதிபதியும் சர்வதேச நீதிமன்ற துணைத் தலைவருமான பேராசிரியர் **C. J. வீரமன்திரி** என்பவர் 'இஸ்லாமிய சட்டவியல் - ஒரு சர்வதேச பார்வை' எனும் நூலை எழுதினார். இது சர்வதேச அளவில் பிரசித்திப்பெற்ற நூலாகும். மேற்குலக சட்டத்துறை மாணவர்களுக்கு சட்டவியல் சம்பந்தமாக ஆற்றிய உரையை நூல் வடிவில் கொண்டு வந்து வெளியிட்டுள்ளார். ஆங்கிலம், தமிழ், சிங்களம் என மும்மொழிகளிலும் இந்நூல் இப்போது வெளி வந்துள்ளது. இந்த நூலில் சகிப்புத்தன்மை எனும் தலைப்பில் அவர் எழுதிய விஷயங்கள் இன்றைய காலத்தில் பலரும் படிக்க வேண்டிய முக்கிய செய்திகளாகும். இதில் இஸ்லாம் கூறும் சமூகவாழ்வு முறையைப் பற்றி பக்கச்சார்பற்று முன்வைத்துள்ளார். அந்த ஆய்விலிருந்து ஒரு பகுதியை இங்கு பார்ப்போம்.

இஸ்லாமில் (இணைவதில்) அறவே நிர்ப்பந்தமில்லை. வழிகேட்டிலிருந்து (விலகி) நேர்வழி மிகத் தெளிவாகி விட்டது. ஆக, எவர் ஷைத்தானை நிராகரித்து, அல்லாஹ்வை நம்பிக்கை கொள்கிறாரோ அவர் மிக உறுதியான வளையத்தை பற்றிப்பிடித்துக் கொண்டார். அறவே, அ(ந்)த (வளையத்தி)ற்குத் துண்டிப்பு இல்லை. அல்லாஹ் நன்கு செவியுறுபவன், மிக அறிந்தவன் ஆவான். (அல்குர்ஆன் 2 : 256)

வன்முறையின் மூலம் மார்க்கத்தை வளர்க்க முயல்வது இஸ்லாமிய கொள்கைகளுக்கு முரணானது என்பதை உணர்த்தும் குர்ஆன் வசனங்களில் இதுவும் ஒன்று. நிர்ப்பந்தத்தையோ கருத்துத் திணிப்பையோ அல்ல இஸ்லாம் போதிப்பது. மாறாக, அது சகிப்புத்தன்மையையே உயர்த்திக் காட்டுகிறது. இதற்கு மாற்றமான நடைமுறைகளோ; அல்லது, மாற்றமான வெகுஜன மக்கள் கருத்தோ இந்த இஸ்லாமிய அடிப்படை கோட்பாட்டினை மாற்றி விடமுடியாது.

நபி ﷺ அவர்களின் காலத்திலேயே வழங்கப்பட்டிருந்த உத்தரவாதங்களின் அடிப்படையில் பரந்த உரிமைகளுடன் இஸ்லாமிய பகுதிகளில் தொடர்ந்து வாழும் சுதந்திரம் ஏனைய சமயத்தினர்களுக்கு வழங்கப்பட்டது. நஜ்ரானில் வாழ்ந்த கிறிஸ்தவர்களுக்கு நபி ﷺ அவர்கள் நேரடியாக வழங்கிய உத்தரவாதங்கள் ஏனைய சமயத்தினரின் உரிமைகளை இஸ்லாம் எத்தனை தூரம் மதித்தது என்பதை துல்லியமாக உணர்த்துகின்றன.

இஸ்லாமிய நாடுகளில் வாழ்ந்த யூதர்கள், கிறிஸ்தவர்கள் போன்ற வேதம் வழங்கப்பட்டவர்களுக்கு தத்தமது சட்டங்களைப் பின்பற்றுவதற்கு அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. இது தத்தமது பாரம்பரியச் சட்டங்களைப் பேணி பாதுகாத்துக் கொள்ளும் வாய்ப்பை அவர்களுக்கு வழங்கிற்று. ஆனால், இவ்விதிகளுக்கு சில நடைமுறை ஒழுங்குகள் இருந்தன. சில விஷயங்களைப் பொறுத்த வரையில் குறிப்பாக தனிமனித ஒழுக்கம் தொடர்பான விஷயங்களில் வேதம் வழங்கப்பட்டவர்களும் இஸ்லாமிய சட்டத்திற்கு இணங்கியே வாழவேண்டும் என்ற கட்டாயம் இருந்தது. இதில் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை. இன்று கூட அனைத்து நாடுகளும் தம் எல்லைகளுக்குள் வாழும் அந்நிய நாட்டு குடிமக்கள் தம்நாட்டு குற்றவியல் சட்டங்களுக்குக் கட்டுப்பட்டு வாழ வேண்டும் என்றே எதிர்பார்க்கின்றன.

எனவே, இஸ்லாமியர் அல்லாத ஒருவர் விபச்சாரம் செய்தல், மது அருந்துதல் போன்ற குற்றங்களைச் செய்து இஸ்லாமிய அடிப்படை நெறிகளை மீறினால் அவர் இஸ்லாமிய ஒழுக்கச் சட்டங்களின் அடிப்படையிலேயே தண்டிக்கப்பட்டார். தான் புரிந்த குற்றம் தனது மதநெறிகளுக்கு முரணானதல்ல என அவர் வாதாடுவதனால் எந்தப் பயனையும் பெறமாட்டார். இவ்வாறு முஸ்லிம்களும் ஏனைய சமயங்களைப் பின்பற்றுபவர்களும் இஸ்லாமிய நாடுகளிலேயே சமரச மனப்பான்மையுடனும் ஒற்றுமையுடனும் வாழ்ந்துள்ள போதிலும் இவ்வுண்மையை

மறைத்து உண்மைக்கு மாறான ஒரு தவறான கருத்தை உருவாக்க என்னென்ன செய்ய முடியுமோ அத்தனையும் செய்யப்பட்டுள்ளன என்பது நியாயமான கூற்றே.

இஸ்லாமிய நாடுகளில் வாழ்ந்த பிற மதத்தவர்களை முஸ்லிம்கள் எப்போதும் துன்புறுத்திக் கொண்டுதான் இருந்தனர் என்று தவறான கருத்தை உருவாக்கக்கூடிய செய்திகள் இன்றும் வெளிப்படுத்தப்படுகின்றன என்பதை ஏற்கத்தான் வேண்டும்.

இத்தகைய செய்திகள், இஸ்லாமியச் சட்டம் பிற மதத்தவர்களின் உரிமைகளை அங்கீகரித்தது என்ற உண்மையையும் இஸ்லாமிய நாடுகளில் இஸ்லாமியர் அல்லாதோருக்கும் உயர் பதவிகளும் கௌரவங்களும் வழங்கப்பட்டன என்ற உண்மையையும் மறைக்க முயல்கின்றன.

பிற மதங்களைப் பின்பற்றிய பலர், கலீஃபாக்களின் மருத்துவர்களாகவும் செயலாளர்களாகவும் பொருளாளர்களாகவும் பணியாற்றியுள்ளனர். பெரும்பாலான பிற மத அறிஞர்கள் பலர் பெரும் அன்போடும் மரியாதையோடும் இஸ்லாமிய நாடுகளுக்குள் வரவேற்கப்பட்டனர். இஸ்லாமிய நாகரீகத்திற்கு ஒளியூட்டிய முதன்மையான அம்சங்களில் ஒன்று, இஸ்லாமிய நாடுகளில் ஏற்பட்ட பெரும் கல்வி வளர்ச்சியாகும். இக்கல்வி வளர்ச்சிக்குக் காரணமாக அமைந்தது ஏராளமான கிரேக்க மொழி நூல்கள் அரபியில் மொழிபெயர்க்கப்பட்டமையாகும். இந்த மொழிபெயர்ப்புப் பணியில் பெருமளவில் ஈடுபட்டவர்கள் இஸ்லாமிய நாடுகளில் வாழ்ந்த கிறிஸ்தவ, யூத, இந்து அறிஞர்களே!

டெல்லியில் இருந்த மொகலாயச் சக்கரவர்த்திகளின் ஆட்சிக் காலங்களில் இந்துக்கள் படைத்தலைவர்களாக, மாநில ஆளுநர்களாக, அரச ஆலோசனைச் சபை உறுப்பினர்களாகப் பணியாற்றியுள்ளனர்.

உஸ்மானியப் பேரரசின் காவலரும் கான்ஸ்டாடின் நோபிளை வெற்றிக் கொண்டவருமான இரண்டாம் முஹம்மத் தனது

ஆட்சிக்குள் வாழ்ந்த கிரேக்க மக்களுக்கு அவர்களது சட்டங்களையும் வழமைகளையும் அடிப்படையாக வைத்து அவர்களது சட்டப் பிரச்சனைகளை தீர்த்துக் கொள்ளும் உரிமையை வழங்கியிருந்தார். இந்த வகையில் அரேபிய கலீஃபாக்கள் காட்டிய முன்மாதிரியை இவர் பின்பற்றினார் என்று கூறலாம். துருக்கிய பேரரசுகளுக்குள் கிரேக்க கிறிஸ்தவ மதத்தை பின்பற்றி வாழும் கிரேக்கர்கள் தொடர்பான திருமணம், மண விலக்கு, ஜீவனாம்சம், உயில் தொடர்புடைய வழக்குகள் யாவும் இன்றும் துருக்கிய பேரரசுகளுக்குள் அமைக்கப்பட்டிருக்கும் கிரேக்க கிறிஸ்துவ மத நீதிமன்றங்களினாலேயே தீர்க்கப்படுகின்றன என இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் அமெரிக்க சட்ட நிபுணர் ஒருவர் எழுதியுள்ளார்.

முஸ்லிம் மன்னர்களில் சிலர், சமய சகிப்புத் தன்மையைக் கடைப்பிடிக்காதிருந்துள்ளனர் என்பது உண்மை. பிற மதத்தவர்களை துன்புறுத்தியுள்ளனர் என்பதும் உண்மை. ஆனால், இதற்காக நாம் இஸ்லாம் சமய சகிப்புத்தன்மையை வற்புறுத்தாத ஒரு மதம் என்ற முடிவுக்கு வந்து விடக்கூடாது. ஏனைய மதத்தவர்கள் சமயத் துவேஷம் காட்டியுள்ளனர் என்பதற்காக எப்படி அவர்கள் பின்பற்றிய மதங்களை குறைக் கூற முடியாதோ அவ்வாறே ஒருசில இஸ்லாமிய மன்னர்கள் பிற மதத்தவர்களை சமய அடிப்படையில் துன்புறுத்தியுள்ளனர் என்பதற்காக இஸ்லாம் எனும் மார்க்கத்தை தூற்றுவதும் நியாயமானதல்ல.[61] பெரும்பாலான இஸ்லாமிய மன்னர்கள் கடைப்பிடித்தொழுகிய சமய சகிப்புத்தன்மையைச் சிறப்பாக வெளிப்படுத்தும் நிகழ்வுகள் பல இஸ்லாமிய வரலாற்றில்

61. நாம் வரலாற்றை ஆய்வு செய்த வரை முஸ்லிம் மன்னர்களில் எவரும் மத சகிப்புத்தன்மையின்றி நடந்து கொண்டார் என்பதை காண முடியவில்லை. ஆட்சியின் கீழ் இருக்கக்கூடிய பகுதிகளில் எங்கேயாவது ஒரு சில அதிகாரிகள் மத சகிப்புத்தன்மை இன்றியோ அல்லது கடும்போக்கோடோ சில நேரங்களில் நடந்திருக்கலாம். இத்தகைய அதிகாரிகளின் தவறுக்கு இஸ்லாம் பொறுப்பாகாது.

காணப்படுகின்றன. இத்தகைய நிகழ்வுகள் பல ஏற்கனவே (இந்நூலில்) குறிப்பிட்டுள்ள போதிலும் நீண்ட காலம் இந்தியாவை ஆட்சி செய்த முஸ்லிம் சக்கரவர்த்தியான அக்பரின் ஆட்சியின்போது கடைப்பிடிக்கப்பட்ட சமய சகிப்புத் தன்மையைப் பற்றி அறிதல் பயனளிக்கத்தக்கது. பிறமதத்தவர்கள் பால் இஸ்லாம் காட்டும் சகிப்புத் தன்மையைப் பற்றிய நல்லதொரு விளக்கத்தைப் பெற இது உதவும். மாமன்னர் அக்பரைப் பற்றி ஒரு இந்து வரலாற்று ஆசிரியர் பின்வருமாறு எழுதியுள்ளார்.[62]

இங்கிலாந்தின் அரசி முதலாம் எலிசபத் காட்டிய சமய சகிப்புத்தன்மையை விட அதே கால கட்டத்தில் இந்தியாவை ஆண்ட அக்பர், தன் ஆட்சி அலுவல்களிலேயே கடைப்பிடித்த சமய சகிப்புத்தன்மை ஆழமானதாகவும் விசாலமானதாகவும் பரவலானதாகவும் இருந்தது. பதினாறாம் நூற்றாண்டிலேயே அக்பர் நிலை நாட்டிய அளவு சமய சகிப்புத்தன்மை குடியியற் சுதந்திரம் இங்கிலாந்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியின்போதுதான் நிலைநாட்டப்பட்டது என்பது வரலாறு காட்டும் உண்மை. சமய உட்பிரிவு போராட்டங்களில் சிக்குண்டு ஐரோப்பிய கண்டமே தத்தளித்துக் கொண்டு இருந்த காலகட்டத்தில் ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவர்கள், புரொடெஸ்டன்ட் கிறிஸ்தவர்களை கம்பங்களிலேயே கட்டி எரித்துக் கொண்டிருந்த காலத்தில் புரொடெஸ்டன்ட் கிறிஸ்தவர்கள் கத்தோலிக்கர்களைக் கொன்று குவித்துக் கொண்டிருந்த காலகட்டத்தில் அக்பர் மத பிரிவுகளுக்கிடையே மாத்திரம் ஒற்றுமையை ஏற்படுத்தவில்லை. வெவ்வேறு மதங்களுக்குமிடையே கூட பூரண ஒற்றுமையை நிலைநாட்டினார்.

பல்வேறு மதங்களைப் பின்பற்றும் அறிஞர்களைத் தனது

62. ஆசிரியர் சர்மா இறப்பு : 1952 பக்கம் 67.

அவைக்கு வரவழைத்து சமய விவாதங்களை நடத்துவது அக்பரின் வழக்கமாக இருந்தது.

கேம்பிரிட்ஜ் இஸ்லாமிய வரலாறு கூறுவது போல, அவரின் அரசவை முஸ்லிம்கள், இந்துக்கள், சமணர்கள், ஜொராஸ்டியர்கள், கிறிஸ்தவர்கள் போன்ற அத்தனை மதத்தவர்களுக்கும் ஒரு பொது சந்திப்புக்களமாகவே விளங்கியது.

மாபெரும் இந்துக் காவியங்களான மகாபாரதம், ராமாயணம் போன்றவற்றையும் வேறு இந்து நூல்களையும் பாரசீகத்திற்கு மொழிபெயர்ப்பதற்கு அக்பர் தூண்டுகோலாகவும் துணையாகவும் நின்றார்.

அவரது ஆட்சியில் இந்துக்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் தத்தமது மத விழாக்களை வெளிப்படையாகக் கொண்டாட அனுமதி வழங்கப்பட்டிருந்தது. இரண்டாம் உலகப் போருக்கு முந்திய பிரித்தானிய இந்திய இராணுவத்தில் பணியாற்றிய இந்திய அதிகாரிகளின் எண்ணிக்கையை விட அக்பர் உடைய படையில் பதவிவகித்த இந்து அதிகாரிகளின் எண்ணிக்கை விகிதாசார அடிப்படையில் பார்க்கும்போது அதிகமாக இருந்தது.

இத்தகைய சமய சமரசக் கொள்கையைக் கடைப்பிடித்த ஒரே முஸ்லிம் மன்னர் அக்பர் மாத்திரம்தான் என்றும் கருத முடியாது.

மேற்கத்திய சட்டவியலில் யூத கிறிஸ்தவப் பாரம்பரியம் என்ற ஒன்று காணப்படுவதை போலவே யூத இஸ்லாமியக் கலாச்சார இணைப்பினால் யூத இஸ்லாமியப் பாரம்பரியம் என்ற ஒன்று தோன்றுமளவுக்கு இஸ்லாமிய நாடுகளில் இவ்விரண்டு இனங்களும் ஒன்றிணைந்து இருந்தன.

“ஒரு கையில் வாளையும் மறுகையில் குர்ஆனையும் ஏந்தி வந்த பாலைவன வீரர்களினாலேயே இஸ்லாம் பரப்பப்பட்டது” எனும் வரலாற்றாசிரியர் கிப்பின் வாதத்தை லண்டன் பல்கலைக்கழக

கீழைத்தேய ஆப்ரிக்க கல்வித்துறை முன்னால் இயக்குனரும் மாபெரும் அரபுமொழி அறிஞருமான பெர்னாட் லூவிஸ் முற்றாக ஒதுக்கித் தள்ளுகிறார்.

இத்துடன் வீரமன்திரி அவர்கள் எழுதியது நிறைவுற்றது.

----

## அர்த்தமுள்ள மத நல்லிணக்கம்

ஒற்றுமை மற்றும் நல்லிணக்கம் என்பதை அறிவார்ந்த முறையிலும் சிறந்த வழியிலும் நபி ﷺ அவர்கள் கடைப்பிடித்தார்கள்.

ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் நம்பிக்கை கொள்கிற கொள்கையை அல்லது விசுவாசிக்கின்ற மதத்தை பின்பற்றுகின்ற உரிமை உண்டு. அந்த உரிமையை முறையாக கடைப்பிடிக்கும்போது மக்களிடையே நல்லெண்ணம் உருவாகும். அதுவே நாட்டின் முன்னேற்றத்திற்கும் அபிவிருத்திக்கும் உந்து சக்தியாக அமையும். அடுத்தவரின் மத நம்பிக்கையில் எல்லை மீறும்போது பிரிவினைகளும் குழப்பங்களும் உருவாகும். அதனால் நாட்டில் அமைதியின்மை உருவாகும்.

ஒரு மதம் பாதுகாக்கப்பட வேண்டுமானால் அம்மதத்தின் கொள்கையும் கலாச்சாரமும் முதலில் பாதுகாக்கப்பட வேண்டும். அதன் தனித்துவம் பேணப்பட வேண்டும். எப்போது மதத்தின் தனித்துவம் பேணப்படுகிறதோ அப்போதுதான் அம்மதம் உயிர்வாழும். தனித்துவம் இழக்கும்போது உயிரற்றதாக மாறிவிடும்.

இஸ்லாமிய கொள்கைகளை நிராகரித்த மக்கள் முஹம்மத் நபியை அணுகி, முஹம்மதே! நீங்கள் ஒரு வருடம் எமது கடவுள்களை வணங்குங்கள்! நாங்கள் ஒரு வருடம் உமது கடவுளை வணங்குகிறோம் என சமரசம் பேசினார்கள். இவ்வாறு செய்தால் நல்லிணக்கம் உருவாகும் என்பது அவர்களது எதிர்பார்ப்பு.

அப்போது அல்லாஹ் பின்வரும் ஆறு வசனங்களை இறக்கிவைத்தான்:

(நபியே!) கூறுவீராக: நிராகரிப்பாளர்களே! நீங்கள் வணங்குவதை நான் வணங்க மாட்டேன். இன்னும், நான் வணங்குகிறவனை

நீங்கள் வணங்குபவர்களாக இல்லை. இன்னும், நீங்கள் வணங்கியதை நான் வணங்குபவனாக இல்லை. இன்னும், நான் வணங்குகிறவனை நீங்கள் வணங்குபவர்களாக இல்லை. உங்கள் மார்க்கம் உங்களுக்கு. எனது மார்க்கம் எனக்கு.

(அல்குர்ஆன் 109 : 1-6)

இணைவைத்தலையும் இறை நிராகரிப்பையும் ஏற்படுத்துகிற எந்த ஒரு சொல்லையோ செயலையோ முஸ்லிம்கள் செய்ய முடியாது. அது இஸ்லாமிய நம்பிக்கை படி குற்றங்களில் மிகப் பெரிய கூற்றமாகும்.

அல்லாஹ் கூறுகிறான்:

நிச்சயமாக இணைவைத்தல் மிகப் பெரிய அநியாயமாகும்.

(அல்குர்ஆன் 31 : 13)

திட்டவட்டமாக உமக்கும் உமக்கு முன்னுள்ளவர்களுக்கும் வஹ்யி அறிவிக்கப்பட்ட(தாவ)து: “நீர் இணைவைத்தால் உமது அமல்கள் நாசமாகிவிடும். இன்னும், நீர் நஷ்டவாளிகளில் ஆகிவிடுவீர்.” (அல்குர்ஆன் 39 : 65)

ஆகவே, இரு மதங்கள் என்று ஆனதன் பின்னால் அவ்விரண்டும் இருபாதையில்தான் பயணிக்க முடியும். ஒரு பாதையில் ஒன்றிணைய வேண்டுமானால் அந்த இரண்டும் ஒரு மதமாக ஆகவேண்டும். ஒரு மதமாக ஆகமுடியாது என்றால் ஒருவரையொருவர் மதித்து, தனித்து வாழவேண்டும்.

ஒருவர், தன் கடவுள் உண்மையானவர் என்று நம்புகிறார். மற்றொருவர், தன் கடவுள்தான் உண்மையானவர் என்று நம்புகிறார். இருவருடைய கடவுள் நம்பிக்கையும் வித்தியாசம் எனும்போது சமரசம் செய்வது அறிவுடமையாகாது.

எவருக்கு எந்த மதத்தில் நம்பிக்கை இருக்கிறதோ அதில் அவர் உறுதியாக இருக்க வேண்டும். தான் இருக்கும்

மதத்தில் நம்பிக்கை இல்லையென்றால் நம்பிக்கை தருகிற வேறு கொள்கையின் பக்கம் அல்லது, தான் விரும்புகிற வேறு மதத்தின் பக்கம் போய்விட வேண்டும். அதுவும் இல்லையென்றால் தனித்து நிற்க வேண்டும்.

ஒரு மதத்தின் கொள்கையும் வழிபாடும் இன்னுமொரு மதத்துடன் சங்கமமானால் அதன் அசல் வடிவம் அழிந்துப் போய்விடும். அதுமட்டுமன்றி கலப்படம் செய்யப்பட்ட அந்த மதம் நாளடைவில் போலியானதாகவும் காலியானதாகவும் மாறிவிடும். மதம் காலியாகும்போது அம்மதத்தை வைத்து உருவான சமூகமும் மாயமாகிவிடும்.

ஒரு மதத்தினரின் மதவழிபாடு நடக்கும்போது அந்த இடத்தில் வேறொரு மதத்தினர் இருந்தால் அவர் அந்த மதவழிபாட்டை மதித்து கண்ணியமாக நிசப்தமாக ஒதுங்கி நிற்க வேண்டும். உங்கள் மத வழிபாடுகளை, சாஸ்திர சம்பிரதாயங்களை நடத்தி முடிக்கும் வரை நான் காத்திருக்கிறேன் எனக் கூற வேண்டும். இதுதான் மத நம்பிக்கைக்கு கொடுக்கும் உச்சக்கட்ட மரியாதையாகும்.

உதாரணமாக, பௌத்த மதவழிபாடு நடக்கும் இடத்தில் முஸ்லிம் ஒருவர் இருந்தால் அந்த மதவழிபாட்டுக்கு உரிய மரியாதை கொடுத்து அது முடியும் வரை தள்ளி நிற்க வேண்டும். அங்கு அக்னி ஆராதனை நடக்குமானால், விளக்கேற்றி வைக்கப்படுமானால், புத்தர் சிலைக்கு பூஜை நடைபெறுமானால் அந்த அனுஷ்டானங்கள் நிறைவு பெறுகிற வரை, அதில் கலந்து கொள்ளாது, கண்ணியம் காக்க வேண்டும். அதுதான் பௌத்த மதத்திற்கு கொடுக்கும் மரியாதையாகும்.

பௌத்த மதத்தினர் பள்ளிவாசலுக்கு வந்தால் அவர்களுக்கு உரிய கண்ணியத்தை கொடுத்து மரியாதையாக உட்காரவைத்துவிட்டு முஸ்லிம்கள் தங்களது வழிபாட்டில் (தொழுகையில்) ஈடுபட

வேண்டும். முஸ்லிம்களுடைய வழிபாடுகள் மற்றும் பள்ளிவாசல் எப்படி இருக்கிறது என்பதை பார்ப்பதற்கும் படிப்பதற்கும் அந்த பௌத்த மக்களுக்கு சந்தர்ப்பம் வழங்க வேண்டும்.

அதேவேளை அவர்களுக்கு தொப்பி அணிவித்து நம்முடன் இணைந்து தொழுங்கள் என்று அழைப்பு விடுப்பது அவர்களுக்குச் செய்யும் அவமரியாதையாகும்.

இந்து கோயிலுக்கு முஸ்லிம்கள் சென்றால் பொட்டுவைத்துக் கொள்வதோ, விபூதி பூசிக் கொள்வதோ, திருநீர் பூசிக் கொள்வதோ, (அல்லது, அவர்களுக்கு இந்துக்கள் இவற்றைப் பூசிவிடுவதோ) இந்து மதத்திற்கு செய்யும் அவமரியாதையாகும்.

பொட்டுவைப்பது, திருநீர் பூசுவது, பூணூல் போடுவது, அக்னி ஆராதனை செய்வது, சிலைகளை வணங்குவது, பால் அபிஷேகம் செய்வது ஆகிய இவை இந்து மதத்திற்கே உரிய அனுஷ்டானங்களாகும். இவை இந்து மதத்தை ஏற்றுக் கொண்டவர்களின் நம்பிக்கைச் சார்ந்த வழிபாடுகளாகும். அந்த மதத்தில் நம்பிக்கையுள்ளவர்கள் மட்டும் அவற்றை செய்யும்போது அம்மதத்தின் மரியாதை உயர்கிறது. அந்த நம்பிக்கையற்றவர்கள் அவற்றை செய்யும்போது அது கேலியாக ஆகிவிடுகிறது.

தனது மதத்தை பெருமைப்படுத்துகிறோம் என நினைத்துக் கொண்டு இன்னொருவரை தர்ம சங்கடத்திற்கு ஆளாக்கி விடக்கூடாது. அவர் மனதார விரும்பாத காரியத்தில் அவரை நிர்ப்பந்திக்கக் கூடாது. நல்லிணக்கம் எனும் பெயரில் அவர் அதை செய்யும்படி அவரை வற்புறுத்தக்கூடாது. இந்த அளவுகோல் இஸ்லாமிற்கு மட்டுமின்றி எல்லா சமயங்களுக்கும் பொருந்தும்.

ஒருமுறை முஹம்மத் ﷺ அவர்கள், புதிதாக இஸ்லாமை ஏற்றுக் கொண்ட ஒருசில தோழர்களுடன் ஹுனைன் எனும் பகுதியை

கடந்து சென்றார்கள். அப்பகுதியிலுள்ள இணைவைப்பாளர்கள் (மரங்கள், சிலைகள் போன்றவற்றை வணங்கக் கூடியவர்கள்) ஒரு மரத்தை புனிதமாகக் கருதி அதில் தங்களது ஆயுதங்களை தொங்க விட்டிருந்தார்கள். இதற்கு “தாதுல் அன்வாத்” எனக் கூறப்படும். அதைக் கண்ணுற்ற அப்புதிய தோழர்கள், அல்லாஹ்வின் தூதரே! அவர்களுக்கு தாதுல் அன்வாத் இருப்பது போல் எங்களுக்கும் தாதுல் அன்வாத் ஒன்றை ஏற்படுத்தித் தாருங்களேன் எனக் கூறினார்கள்.

அப்போது முஹம்மத் ﷺ அவர்கள் ஒரு சம்பவத்தை அச்சகோதரர்களுக்கு நினைவுப்படுத்தினார்கள். அல்லாஹ்வின் உதவியின் மூலம் யூதர்களை நபி மூஸா ؑ, (கொடிய அரசனான) ஃபிர்அவ்னிடமிருந்து காப்பாற்றி அழைத்துச் சென்றார்கள். போகும் வழியில் சில மக்கள் சிலை வணக்கத்தில் ஈடுபட்டிருப்பதைப் பார்த்த யூதர்கள், இறைத்தூதர் மூஸாவே! இதோ அவர்களுக்கு ஒரு கடவுள் இருப்பது போல் எங்களுக்கும் ஒரு கடவுளை ஏற்படுத்துவாயாக என கேட்டார்கள். அதுபோல்தான் நீங்களும் கேட்கிறீர்கள். அல்லாஹ்வின் மீது சத்தியமாக நீங்கள் உங்களுக்கு முன்சென்றவர்களின் வழிமுறையை பின்பற்றுகிறீர்கள் என முஹம்மத் ﷺ அவர்கள் எச்சரித்துக் கூறினார்கள்.[63]

இஸ்லாம் தனித்துவமான இறைக்கோட்பாட்டையும் அதன் மூலம் பெற்ற வணக்க வழிபாடுகளையும் கொண்டுள்ளது. அதில் பலதெய்வ வழிபாட்டுக்கோ; அல்லது, அல்லாஹ் அல்லாதவரை வழிபடுவதற்கோ இடம் இல்லை. எனவே, ஏனைய மக்களின் மதவழிபாட்டை விட்டு தவிர்ந்து கொள்ளுமாறு முஹம்மத் ﷺ அவர்கள் வழிகாட்டினார்கள்.

யாரும், யாருடைய நம்பிக்கையையும் புண்படுத்தக் கூடாது; யாரையும் நிர்ப்பந்திக்கவும் கூடாது. மக்களுக்கு உடன்பாடில்லாத

63. அறிவிப்பாளர்: அபூவாகித் அல்லைஸீ ؓ, நூல்: ஸுனனுத் திர்மிதி எண்: 2180.

விஷயங்களில் அவர்களை விட்டுவிட வேண்டும். சமாளித்து போவதும் சங்கமித்து போவதும் உலக விவகாரங்களுக்கு சரியாகுமே தவிர மதக் கொள்கைக்கு சரிவராது என்பதுதான் யதார்த்தமாகும்.

தன் கொள்கையில் உறுதியாக இருப்பது போல் அக்கொள்கை சார்ந்த செயலிலும் கலாச்சாரத்திலும் உறுதியாக, தெளிவாக இருக்க வேண்டும்.

ஒரே மதத்தையும் அதனுடைய கொள்கையையும் சார்ந்தவர்கள் தங்களுக்குள் மணம் முடிக்கும்போதே அத்திருமணம் திருப்தியாகவும் சரியானதாகவும் இருக்கும். அவர்களது குடும்ப வாழ்வும் திருப்திகரமானதாக இருக்கும்.

இருளும் ஒளியும் சமமாகாது, கருப்பும் வெள்ளையும் சமமாகாது என்கிறபோது, ஏக இறைவனை மட்டும் வழிபாட்டுக்கு ஏற்றுக் கொண்டவர்களும் அவனுக்கு இணைவைத்து வணங்குபவர்களும் சமமாக மாட்டார்கள்.

தன்னுடைய வாழ்க்கையில் மோட்சத்தை எதிர்பார்ப்பவன் தனக்கு பிறக்கும் குழந்தைகளுக்கும் அந்த மோட்சம் வேண்டும் என நினைப்பான். கணவன் இருக்கும் மார்க்கத்தில் மோட்சம் கிடைக்கும் என மனைவி கருதினால் அவள் கணவனின் கொள்கையை ஏற்க வேண்டும். இல்லை, மனைவியின் கொள்கையில் மோட்சம் கிடைக்கும் என்றால் கணவன் மனைவியின் கொள்கையை ஏற்க வேண்டும். நிச்சயமாக இருவரில் ஒருவரின் கொள்கைக்குத்தான் மோட்சம் கிடைக்கும் எனும்போது கலப்புத் திருமணத்தால் நல்லிணக்கத்தை உருவாக்க முடியாது.

மதீனாவில் அப்துல்லாஹ் இப்னு உபை என்ற செல்வாக்கு மிக்க மனிதர் இருந்தார். அவர் வெளிப்படையில் முஸ்லிமாக தன்னை காட்டிக் கொண்டாலும் மனதளவிலும் செயலளவிலும் முற்றிலும் அல்லாஹ்வையும் இறைத்தூதரையும் நிராகரித்த நயவஞ்சகனாக இருந்தார். இவர் மரணித்தபோது இவரது இறுதி கடமைகளை நபி ﷺ அவர்கள் முன்னின்று செய்தார்கள். அவரது தேகத்தை

தூக்கி குழியிலும் வைத்தார்கள். நபி ﷺ அவர்களின் மேலாடை அவர் மீது போர்த்தப்பட்டது.

ஆனாலும், இவருக்காக ஜனாஸா தொழுகை நடத்துவதோ பாவமன்னிப்பு கேட்பதோ கூடாது என அல்லாஹ் கட்டளையிட்டான்.

இஸ்லாமிய கொள்கையில் வாழ மாட்டேன் எனக் கூறி மரணித்தவருக்கு இஸ்லாமிய வணக்க வழிமுறைகளை அவரது மரணத்தின்போது செய்வது முறையாகுமா? உயிரோடு இருக்கும்போது அதை நிராகரித்தவர் மரணத்திற்குப் பின் அதனை ஏற்பாரா? அவரது கொள்கை பிரகாரம் அவரை வழியனுப்புவதே அவருக்கு செய்யப்படுகிற மரியாதையாகும்.

அதேவேளை முஸ்லிமல்லாதவரின் பிரேதத்தை பார்ப்பதையோ, அவரது வீட்டாருக்கு உபகாரம் புரிவதையோ, ஆறுதல் கூறுவதையோ நபி ﷺ அவர்கள் தடுக்கவில்லை.

இஸ்லாம் நடைமுறைக்கேற்ற ஒற்றுமையை பேசுகிறது. எல்லாவற்றிலும் கலந்து கரைந்து போகாமல் இருப்பதில் உறுதியாக இருக்கச் சொல்கிறது. அவரவர் இருக்கும் மார்க்கத்தில் இருந்துக் கொண்டு, ஒருவருக்கொருவர் நன்மையில் பங்கெடுத்து, பாவத்திலிருந்து விலகி ஒற்றுமையைப் பேணச் சொல்கிறது.

சமூகங்களுக்கிடையிலான ஒற்றுமையை வலுப்படுத்த பொதுவான மதத்தை உருவாக்குவதோ பொதுவான கலாச்சாரத்தை உருவாக்குவதோ தீர்வாகாது. மாறாக, ஒவ்வொருவரும் தங்களது மதத்தின் மீது பற்றுடனும் உண்மையான நம்பிக்கையுடனும் வாழவேண்டும். அதைவேளையில் ஒருவரையொருவர் மதித்து கண்ணியத்துடன் வாழ்வதில்தான் மத நல்லிணக்கமும் சமூக நல்லிணக்கமும் இருக்கின்றன.

இஸ்லாமிய மார்க்கம் எல்லா விஷயங்களிலும் நடுநிலையான நிலைப்பாட்டை உடையதாகும். தனது உண்மைத்தன்மையை உறுதியாக கூறுகிற அதேவேளையில் பிற மத மக்களுடன் எப்படி ஒற்றுமையாக, இணக்கமாக வாழ வேண்டும்

என்பதையும் அழகிய முறையில் விவரிப்பதை இதுவரை கூறப்பட்ட ஆதாரங்கள் வாயிலாக நாம் அறிந்து கொண்டோம்.

ஆகவே, ஒரு முஸ்லிம் தனது மார்க்கத்தில் உறுதியாக இருப்பதுடன் பிற மதத்தவர்களுடன் ஒற்றுமையாக இணக்கமாக வாழ பழகிக்கொள்ள வேண்டும். வெறுப்பு, பகைமை, காழ்ப்புணர்ச்சி, கலகம் விளைவித்தல், குழப்பம் செய்தல் போன்ற இழி குணங்களை விட்டு தூரமாக இருக்க வேண்டும்.

இந்நூலை நீங்கள் வாசிப்பதுடன் பிற சமய மக்களுக்கும் கொடுத்து இஸ்லாமின் மேன்மைகளை அவர்கள் அறிய உதவுங்கள்!

அல்லாஹ்வே! எங்கள் பாவங்களை மன்னிப்பாயாக! எங்களுக்கு அருள் புரிவாயாக! ஆமீன்.

# ஆதார நூல்கள்


1. அல்குர்ஆனுல் கரீம்
2. ஸஹீஹுல் புகாரி
3. ஸஹீஹ் முஸ்லிம்
4. ஸுனன் நஸாயி
5. ஸுனன் அபூ தாவூது
6. ஸுனனுத் திர்மிதி
7. முஸ்னது அஹ்மது
8. அஸ்ஸுனனுல் குப்ரா லில் பைஹகி
9. தப்ஸீர் இப்னு கஸீர்
10. அல்கராஜ் லி அபீ யூசுஃப்
11. ஸாதுல் மஆத்
12. சீரா இப்னு ஹிஷாம்


----